REGISTERED—No. M. 108.

"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.

Vol. XVIII.] JANUARY 1911. [No. 10.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5 அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




**DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா
ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW
AND TAMIL MONTHLY,
ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.—திருக்குறள்

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

CONTENTS.



அட்டவணை.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

[Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.
**THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,**
Overland 8 Annas extra.] *Lalitalaya, Mylapore, Madras, S.* [Overland 8 Annas extra.
**For the Viveka Chintamani Publishing Committee.**
Thin Paper Edition for the people.] *(Copyright Registered)* [Subscription Price: Yearly Rs. 4

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti.*

# THE VIVEKA CHINTAMANI.

ESTABLISHED 1892.

The Oldest and the Best Tamil Monthly: Yearly Rs. 4.

Thick Paper Edition Rs. 5. in Advance.

Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.

**EDITOR**
**C. V. Swaminatha Aiyar.**

LALITALAYA, MYLAPORE.
*Madras, 8. Septr. 1910.*

---

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4, வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே! விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதந்தோறும் ஒழுங்காக வெளியாகி வருகிறது. ஸாதாரண வருஷ முதல் மிகவும் அருமையான விஷயங்களெல்லாம் வெளியாகிவருகின்றன. ஸித்தர்கள் ஸாதநமுறை, யோகம், பக்தி, ஞானம் முதலான ஸாதந முறைகள் உபநிஷத் வாக்கியார்த்தம் இவை வெளியாகிவருகின்றன. விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைவிக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், பாஷாஞானம், நீதி போதம், வேதாந்த சாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள் பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்தியானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப்பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ் நாடெல்லாம் ஜ்வலித்துவருகிறது. இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாராகச்சேர்வதுடன் தங்கள் நேசர்களுக்கும் காட்டி அவர்களையும் வாங்கும்படிசெய்து ஆதரித்து வரக்கோருகிறோம். மனிதர்களுக்கு உய்யும்வழிகாட்டி அவர்களைக் கடைத்தேறச் செய்யும் உண்மையான ஸத்குருவைப்போல விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்துதவியாய் நின்று விவேகத்தை வளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக் காரர்களாய்ச் சேரவும், இதரர்களையும் அப்படியே சேரும்படி செய்யவும் கேட்டுக்கொள்கிறோம். இப்பத்திரிகையை வாங்கி வாசிப்போர் இகபர சாதனங்களிரண்டிலுந் தேறிப் பெறு வாழ்வெய்துவர். சன்மார்க்க சாதனமான பத்திரிகையென்றும் விவேக விருத்திக்கின்றியமையாததென்றும் அநேகர் அதை ஆதரித்துக் கொண்டாடிவருகிறார்கள். பத்திராசிரியருக்கும் பத்திரிகைக்கும் அர்பத்நட் கம்பெனி முழுகிப்போனதில் நேர்ந்த பெரு நஷ்டத்தால் செலவுக்குவேண்டிய அளவே காபிகளச்சிடப்படுவதால் வேண்டுவோர் உடனே யெழுதிப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

1910ஞ ஏப்ரல் - மே முதல் 18-வது வால்யம் ஆரம்பம்.

சி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியர்.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயர், பி-ஏ., பி-எல்.
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி.

ஐயா,

## ORDER FORM.

Please enrol me as a Subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz, Rs. 4-1-0.

ஐயா, விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P. மூலமாக அனுப்பக் கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர், தொழில், ஊர் விலாசம், போஸ்ட் இவைகளை கண்டெழுதவும்.

☞ தனிப்பிரதி ஒற்றைச்சஞ்சிகையானால் அணா $5\frac{1}{2}$, இரட்டை சஞ்சிகையானால் அணா 10 அனுப்பவும்.

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it." But,*

*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."



அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATI.**

புத்தகம். 18.] 1911ஸு ஜனவரிமீ, சாதாரணஸு தைமீ [சஞ்சிகை. 10.

# THE SPIRIT OF RELIGION

## *or, Veera-Saivam to the Fore.*

### (The Tenth Arudradarisanam).

"In these days of spiritual revival when the spirit of God is moving the waters of the East, every attempt that is made to accentuate the spiritual aspect of things deserves the attention af all right-thinking men, for the work of the spirit is manifest only to those who worship God in spirit and in truth. Of course, the creed-bound soul with the shackles of conventionality to tighten its chains, must have its own graduated method of salvation, working itself up by slow degrees from one plane to the other, moved solely by the desire for enjoyment and pleasure, and for such as these the Creed of Religion is necessary; but the Kigdom of Heaven is not reached nor won by these pusillaminous spirits. "*The Kingdom of God suffereth violance and the Violent take it by force.*" It is only those who are violently in love with God dare to assail the Kingdom of God by violent efforts of valiant deeds and these valiant souls are not content to wait and cry and whimper like helpless children to attain admittance to the Kingdom of God. They have a painfully real Self-Consciousness—the consciousness of Higher Self, and this consciousness makes them feel certain that they are the children of Light—rather grown-up-children of Light; and they feel impatient at their exclusion from the Kingdom of God and

the dilly-dallying or hide and seek which the *Avarana* and *Vikshepa saktis* of maya play with them and their earnest efforts to reach the feet of God. Their growing light makes them highly sensitive to the subtler vibrations of the Spirit, and this supersensitiveness makes it highly irksome to them to remain in the lower planes of consciousness while their Souls are attuned to a higher and higher Spiritual light, separation from which is no less than intolerable torture to them. When once the soul of man is freed from the cramping influence of thought and sense perceptions, the ego of man has a tendency to rise higher and higher into the pure Empyrean above, and have a bird's eye-view of the world it has left and risen above on the wings of the Spirit which are *Sraddha* and *Bhakti, or, Faith* and *Love,*"—*The Spirit of Religion or Veera-Saivam to the Fore.* (A booklet published by the *Lalita Publishing Co.* Madras, S. price Annas 8.)

# சிரத்தாபக்தி அல்லது வீரசைவம்.

[ஆருத்தரா தரிசனம்—பத்தாம் முறை.]

"பொதுவுறத் தருமம் பண்ணிப் புசல்வினைச் சமமா தாகி
அதுவிது வென்னுஞ் சித்த மமலமா யநித்த நித்தம்
இதுவென வுணர்ந்த நித்தத் திகபரத் திச்சை யற்ற
சதுரர்க ளிடத்திற் பாசந் தகர்ந்திடும் பத்தி தோன்றும்,"

—ஸ்ரீ குமாரதேவரியற்றிய சகசநிஷ்டை.



பக்தி யென்றால் என்ன? பகவானிடத்தில் இடையறா அன்பு வைத்தலே பக்தி. பகவான் யார்? ஷடூர்மிகளையு மறுத்துத் தஹிக்கும் ஷாட்குண்ய (அறுகுண) பூரணனவர் எவரோ அவரே பகவான். இந்த பக்திக்குக் காரணம் சிரத்தை. இது ஸம்ஸாரத்திலடிபட்டலுத்து விரக்தி முதிர்ந்த வைராக்கிய சித்தர்களிடத்தில் தானே விசேஷமாயிருக்கும். ஏனெனில் விளையாடி யலுத்த குழந்தை தாயைநாடி தாய்ப் பாலுக்கு அழும். விளையாடிக் கொண்டிருக்கும் வரையில் தாய்ப் பாலுக்கழாது, தாயோடும் ஓடியாடி விளையாடுமேயன்றி, மடியிலேறி மாரைப் பிடித்திழுத்துப் பாலுண்ணாது. ஆகையால், இப்பிரபஞ்ச லீலையில் ஸம்ஸார மென்கிற ஸாரமற்ற விளையாட்டில், மரச்சொப்பை வைத்துக் கொண்டு, மரத்தால் செய்த கிலுகிலுப்பையை ஆட்டி, அதையே சப்பிச் சப்பிச் சாரமில்லாமல் நாக்குலர்ந்து போகும் வரையில் விளையாடும் குழந்தைபோல், விளையாட்டிலே புத்திசென்று ஆடியலுத்த முமுக்ஷுக்கள், இல்லறம் துறவற மென்கிற இரண்டில் எதுவோ ஒன்றைப்பற்றி ஸாரம் நிறைந்த தருமமோ, தவமோ செய்து, நடுவுநிலை யுண்டாகும்படி நிலைகுலையாத சித்தம் ஸித்திக்கப் பெறவேண்டும். நிலைகுலையாத சித்தமே "தாரணை" யென்று சொல்லும் யோக சித்தியாம்

"தாரணை" தரித்தவர்கள் சமதமாதியான அறுவித சம்பத்துக்களையும் பெற்று நல்வினை தீவினை யிரண்டும் "நேரொப்ப"ச் சமபுத்தி சித்திக்கப் பெறுவார்கள். சமபுத்தி ஸித்தித்த தானால் பேதபாவனையடங்கி "அதுவிது வென்னுஞ் சித்தம் அமலமாய்" விளங்கிக் கொண்டிருக்க, "சுத்தமனஸ்" என்றும் "தேஜோ

மனஸ்", என்றும் சொல்லப்படும் "பொன் செய்யும் மருந்து" புதுமையாய்ப் பெற்று கரும்பொன் செம்பொன்னொத்த "காமசங்கல்ப' லோகங்களையெல்லாம் "பைம்பொன்னாக" மாறச்செய்யும் மாண்புள்ள "வாதசித்தி" பெறுவார்கள். இதில் சந்தேகமில்லை. "என்னும் என்னும் என்னதே! பொன்னும், பொன்னும், பொன்னுமே!" இதையே "ஹிருதயசித்தி" யென்றும் சொல்வர்.

வேதமும் சுருதியும் முறையிடுகிறபடி அநாஹத்மான ஹிருதய ஸ்தானத்திலே ஸ்தூலமல்லாத "சூக்ஷ்மசப்தம்" ஒன்று இருக்கிறது. பிராணனை ஒழுங்குபடுத்தி நிர்மல சித்தத்தோடிசைத்து "வாசிவசம்" உண்டாகப் "பஞ்சாக்ஷர உபதேசம்" பெற்றுப் பிரணவோபாஸனை செய்து வந்தால், வாசி வசமாகும்.

"வாசிவா" வென்று வாசியை வைத்து
வாசியோ டொன்றும் வகையறிவாரில்லை;
வாசியோடொன்றும் வகையறி வாளர்க்கு
வாசியோடீசன் மகிழ்ந்திருந் தானே."

என்பது திருமந்திரோபதேசம். இப்படி வாசிவசம் செய்து அநாஹத சப்தத்தைக் "கேளாமற் கேட்டு" அதையே அநுசந்தானம் செய்ய வல்லார்க்கு, அந்த சப்தத்துக்குள்ளே அதிலும் சூக்ஷ்மமான "த்வனி" யொன்று தோன்றும். அந்த "த்வனி"யை பக்தி சிரத்தையோடு கவனித்து அநுசந்தானம் செய்து வந்தால், நாதகீத ஸ்வரூபமான அந்த "த்வனி" யில் கண் கொள்ளாக் காட்சியாம் "ஜ்யோதி" தோன்றும். இது உளக்கண்ணுக்கே தோன்று பன்றி ஊனக்கண்ணும் முகக்கண்ணுக்குத் தோன்றாது.

எங்கும் நிறைந்து ஏகமாய் விளங்கும் "பாற்கடல்" போன்ற இந்த ஜோதிர் விலாசத்திலே உள்ளத்தை உணர்வுணர நிறுத்தி யுணரவல்லார்க்கு க்ஷீராப்தியிலே ஆலிலைமேற் பள்ளிகொண்ட அழகு சுந்தரமாம் அற்புதக் குழந்தைபோல், முத்தொழிலு மியற்ற வல்லதாகிய போக்ஷத்தை விரும்பும் "மனஸ்" காணப்படும். இந்த தரிசனம் பெற்றவர்கள் தத்துவமுணர்ந்த தற்பர ஞானிகளாவார்கள். இவர்களையே தத்துவ ஞானிகளென்று சொல்வது. திரிகாலமும் இவர்களுக்குத் திரையவிழ்த்துவிட்டது போல் விளங்குமாதலால் இவர்களைத் திரிகால ஞானிகளென்றும் சொல்லுவார்கள். தத்துவ ஞானம் தலையெடுத்தார்க்கு மாயை மயக்கம் மனதைக் கலக்காது. இங்கே "மனது" என்று சொன்னது காமசங்கல்பரூபமனதையேயன்றி, ஆத்மசங்கல்ப ஸ்வரூபமாய் விளங்கும் "உன்மனஸ்" என்னும் உத்தமநாமம்பெற்ற மேலே சொன்ன முமுக்ஷுத்துவ மனஸை யல்ல. "ஜோதிரந்தர்க்கதம் மன:" என்று சுருதி கூறிய இந்த உன்மனஸானது சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாகிய முத்தொழிலையும் சங்கல்ப மாத்திரத்தினாலேயே செய்ய வல்லதாகையால் இதைத் "திருகுணாத்மக மாகவும்" வருணித்துக் கூறுவர் மேலோர். இதையே நித்தியாநித்திய வஸ்துவிவேகம் முதிர்ந்த நிச்சயம் பொருந்திய மனஸ் என்றும் "ஸ்வாத்ம தரிசனம் பெற்ற மனஸ்" என்றும் சொல்லித் துதிப்பர். இம்மனதானது சநகாதி நால்வரைப் போல் எல்லா விசாரமுஞ் செய்தும் எல்லா ஸித்திகளும் பெற்றும் "ஓய்ந்துட்கார வல்ல" நிர்விகல்ப நிஷ்டை மட்டும் கைகூடாமையால், திரிமூர்த்திகள் தொழிலையும் தானே செய்தலுத்துக் கல்லாலநீழலில் கருணையங் கடலாய் குருமூர்த்தங் கொண்டு வீற்றிருக்கும் பரமசிவத்தினிடம் "மனவிஸ்ராந்தி' பெறும் வகைநாடிக் கைகட்டி வாய்பொத்தி சிரத்தாபக்தி நிறைந்து வீற்றிருக்கும். இதையே "அநித்த நித்தம் இதுவென வுணர்ந்த நித்தத் திகபரத் திச்சையற்ற" சாதுரியமனம் என்று "மஹாராஜா" வாயிருந்து துறவு பூண்டு சகசநிஷ்டை சித்திக்கப்பெற்ற ஸ்ரீ குமாரதேவர் விளங்கக் கூறியிருக்கிறார்.

இப்படிப்பட்ட சாதுர்ய மனதை யுடையவர்கள் தாமே "சதுரர்கள்" என்னப்படுவர். மற்றவர்களெல்லாம் இவர்களுக்கு ஈடாகார். ஏனெனில் அவர்களெல்லாம் மனத்தை வசப்படுத்தினவர்களா யின்றி, மனதின் வசப்பட்டவர்களாய், அடங்காப் பெண்டாட்டி கையில் சிக்கியழும் ஆடம்பர புருஷர்களுக் கொப்பாவார்.

இந்த மனம்தானே "பொன்னம்மாள்." "பொன்செய்யும் மருந்து"தானே விஷமும் ஆகும். இம்மனதை யடக்கியாளும் புருஷர் வசத்தில் இது "கமலாம்பாள்"* போல் பதிவிரதா சிரேஷ்டையாக விளங்கும். அவர்களே "முத்துஸ்வாமி ஐயர்" என்று சொல்லும் முத்துப்போன்ற ஜோதிர் விலாஸத்தில் ஸ்வாமியைப்போல் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமாகிய முத்தொழிலையும் தன் சங்கல்பமாத்திரத்தினாலே செய்ய வல்லதாய்ச் செய்துகொண்டிருக்கும் உத்தம கற்புடையஸ்திரீயாம். இந்த "உன் மனஸ்" தன்னை யடக்கியாள்பவரே ஆரியர்களாம். (ஆரியர், ஐயர் என்று திரிந்தது.) மற்றவர்கள் அவர் தம்பி "சுப்பிரமணிய ஐயராம்." அவர்களுக்கு இந்த மனஸ் காப (விஷ)மருந்திடும் "பொன்னம்மாளாக" கர்ம வசத்தால் வந்து பொருந்தும். சுப்பிரமணிய ஐயரைப்போல் "பெண்டாட்டி யாத்தாள் பெரியாத்தாள்" என்று இந்தக்கர்மகாரணமான திருகுணாத்மக மனஸையே தெய்வமாக எண்ணி அதன் மயக்கில் அகப்பட்டுழலுபவர்களுக்கு அந்த மனஸ் அதனுடைய மாயா ஜாலத்தால் அவர்களை மகிமுச்செய்து கடைசியில் காமம் என்னும் விஷ மருந்திட்டுக் கர்மம் என்கிற மரணத்துக்காளாகச் செய்து, புருஷனைக் கொன்ற பாதகத்தால், விதவை முட்டாக்கு அதன் தலையில் விழச், சித்தப் பிரமைகொண்டு கையில் முறம், விளக்குமாறு முதலிய சின்னங்கள் கொண்டு பைத்தியம் பிடித்த பொன்னம்மாளைப் போலவே சித்த ஸ்வாதீனமிழந்து "வெறி வெய்விதாலு" எனப் பலவிதமாக வெறிகொண்டு வருந்தி யுழலும். இப்படிப்பட்ட மனஸ்தான் தச வித்யைகளில் ஒன்றான "தூமாதேவி." இவளையே கமலாம்பாள் சரித்திரத்தில் சுப்பிரமணியஐயர் ஸம்ஸாரம் பொன்னம்மாளாக வருணிக்கப் பட்டிருக்கிறது. அசடர்களிடத்தில் தூமாதேவியாக விளங்கும் இந்த "மனஸ்" தானே, "சதுரர்களிடத்திற் பாசம் தகர்ந்திட"ச் செய்து, "பக்திதோன்றும்" சாதனமாக விளங்கும். இல்லறத்தில் மஹாலக்ஷ்மியாகவும் துறவறத்திலும் அவர்களை விட்டுப் பிரியாத அகண்டானந்தலக்ஷ்மியாகவும் விளங்கும்.— இதைத்தான் "கமலாம்பாள்" என்று கமலாம்பாள் சரித்திரத்தில் வருணிக்கப்பட்டிருக்கிறது.

பக்தி தோன்றினல் முந்தி தானே சித்திக்கும். ஆனால் அதற்கு கமலாம்பாளைப் போல் கலங்காத சித்தமும் திடமான பக்தியும் பெற்றிருக்க வேண்டும் அப்படிப் பெற்றுள்ளோர் யாரேயாயினும், "சித்தவிருத்தி நிரோதனத்தாலே" கலக்கமும் குழப்பமும் நீங்கி, அலையோய்ந்த சமுத்திரம்போல் மனந்தெளியப் பெற்று திடபக்தி விருத்தியினல் தத்துவஞானம் சித்திக்கப் பெற்றால், அவர்கள் எப்போதும் எங்கும் இராமனையே பார்த்து இராமப்பிரேமையில் ஈடுபட்டுக் கமலாம்பாளைப்போல் சகஜநிஷ்டையெய்துவர். அவர்களே வீரசைவரென்று சொல்லப்படுவர்.

"சித்த மாகுஞ் சிவமய மாகிய
வித்தை யூடு விசேடம தாகியே
யெத்தி னலிங் கிரமிப்ப னன்னவன்
பொய்த்தி டாத புகழ் வீர சைவனே."

வீரசைவனென்றல், வாச்சா வேதாந்திகள் சண்டைக்கு வந்து விடப் போகிறார்கள்! காரியத்தைப்பற்றி நின்று காரணஞானம் பேசுபவர் "வேதம் முதலான நல்லாகமத் தன்மை

* "கமலாம்பாள் சரித்திரம்"—3-ம் பதிப்புப் பார்க்க (விலை ரூபா 1-4-0.)

யை விளக்கும்" உள்ளுணர் வில்லாதவர்கள். அவர்களே "வீறுவாதம் பேசுவாய் வாதநோவாளர்." இவர்களுக்கெல்லாம் உன்மனுதேவியார்த உத்தமவித்யேசுவரி, "எட்டாதமூர்க்கனுடை மாமருந்துக்கு அமிர்தமா" மென்பது அனுபவத்தில் சித்தாந்தமாக விளங்கும். வேதாந்தமே சித்தாந்தம். வேதாந்தஞானம் ஸ்வானுபவமாய்ச் சித்திக்கப் பெற்றவன் எவனோ அவனே "வீரன்." மற்றவர்களெல்லாம் பதர்களும் பேடிகளுமாவார். அந்த வீரனுடைய சகஜநிஷ்டானுபவமே "வீரசைவம்." இதற்கு ஆதாரம் என்னவென்றால்:—

"அரிய வேதாந்தத்தி னுரு ஞானமே
மருவரும் வித்தை யென்றுரைப்பர் மற்றதில்
விரவினோன் யாவன் மற்ற வனையன்வீ ரனென்
றுரைதரு கிற்பர்மெய் யுணர்ந்து ளோர்களே."

அகண்டலக்ஷியாதீதமான இந்த சகஜானுபவஞானம் திரிகரண சுத்தியாய் "ஸத்தியம் வத: தர்மம் சர" என்ற வேத வாக்கையனுஷ்டித்து சிரத்தாபக்தி நிறைந்து கலைஞான மூண்டாகி அதனால் "அங்கலிங்க சங்கமம்" என்று சொல்லும் "தத்துவமசி" மஹாவாக்கியத்தின் உண்மையை அனுபவபூர்வமாய் அறிந்து, அறிந்த அறிவும் அழிந்து, அறிவழிந்த அந்த சுகத்தை யனுபவித்தவர்களுக்கே நித்த முத்த நிர்மலாசாரமாயும் அகண்டலக்ஷியாதீதமாயும் அசம்புற மிரண்டுமொக்க சித்திக்கும். இதுவே வீரசைவம்—"அனுபவஞானம்" எனினும் பொருந்தும். இந்த அனுபவஞானம், சமாதி யனுபவமென்றும் சகஜானுபவமென்று மிருவகைத்தாய்ச் சொல்லப்படும். ஆனால் சமாதியனுபவத்தின் பூர்த்தியே சகஜானுபவ மாகும்.

சமாதியும் சவிகல்பம் நிர்விகல்பம் என இருவகைத்தாய்ச் சொல்லப்படும். சவிகல்பம் என்பது "நேதி நேதி" யென்று அறியப்படும் ஞானம். நிர்விகல்பமென்பது, தூங்குகிறவன் கையிலுள்ள புஷ்பம் தானாய் நழுவிவிடுகிறது போல், "உபாதியினொழிவால்" "நேதி ஞானமும்" நழுவிப்போகஎஞ்சிநின்ற சச்சிதானந்த பூரணமான நிறைஞானமாம். இப்படி உபாதியற்ற நிறைஞானம் பெற்றும், உபாதியிழக்காமல், நிறைஞானமும் குறையாமல், கடமடாதிகளின் உள்ளும் புறமும் நிறைந்துள்ள ஆகாசம்போல் அகம் புறம் என்கிற பேதமற்று எங்கும் நிறைந்துள்ள சின்மய சிதானந்த சிதேகரஸ பூரணமாய் விளங்குவது சகஜஞானமாம். இதை விரும்புவோர் தம் இஷ்ட தேவதையாம் சித் சக்தியைக் கோருவது இது:—

"சவிகற்ப நிருவிகற்பத் தகநிஷ்டை யெனவுரைக்கும்
இவிகற்ப மென்று மின்றி யிடைவிடாச் சகச நிட்டை
செவியதி னெனக்கு நீயுந் திருவுளஞ் செய்யவேண்டும்
அவியமில் விருத்த வெற்பி லம்மையே யன்பர் வா
[ழ்வே."

"அன்பர் வாழ்வாம்" விருத்தாசலத்துரை "அம்மை"தானும், 90 வயதான விருத்தையாய்த் தோன்றி, ஒவ்வொரு வியூகத்துக்குப் பத்தாகப் பகர்ந்து கொடுக்க ஒன்பது வயதேயான நவவியூக நாயகியாம் "வாலை"யேயாகி வள்ளியம்மைகுலம்கோதிக் குறங்கூறி யுறஞ் சொல்லிப் போனாள். அவள் சொன்னதோர் குறந்தானும், பத்தாவது ஆருத்ரா தரிசனமாமின்று பக்குவமாய்ப் பலித்து ஐயே! ஆகையால் மார்கழிமாசம் திருவாதிரைநாளே நாம் பிறந்தநாளன்றி இறந்த நாளுமதுவே யாம். இப்படிப் பிறந்திறந்தினிப் பிறவா வரம் பெற்ற இத்திருவாதிரை நாளின் மகிமையை யாமென்னென்று சொல்வோம்!

"மார்கழிமாசம் திருவாதிரையும் வாலாயிற்றையே
கார்குழலாள்மோஹினியுங் காரணப்பேயாண்டியுமே
[கரைந்தவுரு மாறிநின்று
பாரிலுள்ளபக்தர்கள் பரிபக்குவர்தாமுய்யப் பாங்கரு
[ணை மிகுதியாலே
திரிபுரமெரித்த தேஜோமயானந்தனைக் கால்கொடு
[த்தாள்வன் தரிசிக்கவாரீர், வாரீரே!"

ஓம்தத்ஸத்.

## The Old Dame's Prophesy.

### விருத்தாசலத் தம்மை குறம்.

### I.

### முதற்குறம்.

ங்கப்பா எழுபத்தியைந்து ரூபாய் கொடுத்துப் பெரிய வெந்நீர்க்கொப்பரை(அண்டா) வாங்கினார். அது எழுகுடம் ஜலம்பிடிக்கும். அதை நான் எனக்கு வேண்டுமென்று கேட்கவில்லை; ஏனெனில் நான் அதற்குரியவளாகவே பிறந்துவிட்டேன். நான் பிறந்ததினாலேயே அதற்குரியவளாய்விட்டேன். ஆதலால் எங்கப்பாவை நான் "கொடு"வென்று கேட்கத் தேவையில்லாமலே போய்விட்டது. கரியும் கட்டையும் யதேஷ்டமாய்க் கிடக்கிறது. வெந்நீர் போட்டு வந்தவர் போனவர், பிள்ளைகுட்டி, பெண்டாட்டி, உற்றார், உறமுறையார் எல்லாரும் சுகமாக ஸ்நாநம் செய்தார்கள். இன்னமும் கரிகட்டை, யிவற்றிற்குக் குறைவில்லை— வேண்டிய அளவு கிடக்கிறது. அடுப்பு (யோகாக்னி) நன்றாக ஜ்வாலைவிட் டெரிந்துகொண்டிருக்கிறது. ஆனால் வெந்நீர்க் கொப்பரையில் ஜலம் இல்லை. ஜலம் நிறப்பலாமென்று குழாயைத்திறந்தால், அதிலிருந்து ஜலம் வருவதற்குப் பதிலாகக் காத்துவருகிறது. அடுப்போ எரிகிறது. அண்டாவோ பழுத்துப்போகிறது. ஜலமோ பக்கத்தில்தானே யிருக்கிறது. எடுத்துக்கொட்ட ஆளில்லாமல்; ஐயோ! அண்டா பழுத்துப்போகிறது! இன்னம் கொஞ்சம்போனால் வெந்நீர்த்தவலைதானும் உருகி உலோகமாகப் போய்விடுமே! ஐயோ! ஜலம்மொண்டு கொட்ட ஆளில்லையே! இல்லையே! இல்லையே! கூ! கூ! குய்யோமுறையோ, எத்தனைநாளுக்கிது தாங்கும்! இந்தசடம் இன்னம் எத்தனை நாளைக் கிருக்கப்போகிறது! ஜல்தி! ஜல்தி! உஷார்! உஷார்! ஐயோபிள்ளாய், இனிக் கண்டவர் கேட்டவருக்கெல்லாம் கொடுத்து வழங்காதே. வேலைசெய்தவனுக்கே கூலி கொடு. கண்டவனெல்லாம் வந்து குளித்துப் போகக் கொண்டவன்பானை கூடேறிப்பழுத்து உருகிப் போகிறது! கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு! பாத்திரமறிந்து கண்ணைக்கொடு! சொன்னேன், சொன்னேன், முக்காலுஞ்சொன்னேன்." (முக்காலுஞ்சொல்லி முதுகுறத்தி தான்மறைந்தாள்.)

### II

### இரண்டாங் குறம்.

வள்ளியம்மை குலத்துதித்த வாழ்குறத்தி வேஷம்பூண்டு,
கள்ளத்தனஞ்செய்து கண்களையுஞ் சிமிட்டிக்கொண்டு,
கூடைமுறம் பாய்பின்னுங் குறத்திபின்னும் வாலையாக்
கூடஸ்தமாகக் குறஞ்சொல்வாள் கேட்பீர், கேட்பீரே!

"மூங்கில், பிரம்பு—இரண்டிருக்கிறது. மூங்கிலுக்கும் கணுவுண்டு, பிரம்புக்கும் கணுவுண்டு. மூங்கிலுக்கு உள்ளே துவாரம் (ஆகாசப்) உண்டு. பிரம்புக்கு அதுவில்லை. மூங்கிற் பிளாச்சாலும் பாய்பின்னலாம். பிரம்புப்பிளாச்சாலும் பாய் பின்னலாம். மூங்கில்பாய் விலை ஸரஸம். பிரப்பம்பாய் விலையதிகம். எங்கள் மாமா எனக்கு சீர்கொடுக்கவென்று மூங்கிலும் பிரம்புமாய்ச் சேர்ந்து கலந்து பெரியதாகவும் பிரம்மாண்டமாகவும் தேவசபை, இராஜசபைகளுக் குதவும் படியான பாயொன்று பின்னி அதைச் சுருட்டி மடக்கி நன்றாகக்கட்டி மூன்று வண்டிபாரம் ஏற்றிக் கொண்டுவந்து போட்டுவிட்டார். பிறந்தகத்து மாமன் "எங்கணும் வியாபி நீ" யென்ற சொல்லுங் கேற்றவன், மஹாவிஷ்ணு வென்றால் அவனுக்குத் தான் தகும். பிறந்தகத்துச் சீர் எனக்குப் பெருமையாக வந்தது. புகுந்த வீட்டிலோ, சுருட்டி மடக்கி சொகுஸாகக்கட்டிவந்த பாயைத் தூக்கியெடுத்து விரித்தாளவகையில்லை; குறவர்குலம்

விளங்க வள்ளியம்மை பிறந்தாலும் மறவர் குலம் புகுந்தால் மாண்புற்று வாழலாமோ? குறக்குலத்தில் பிறந்த பெண் குறவஞ்சி பாடினாலும் வேலாயுதனையன்றி வேற்றானை மணப்பாளோ? கோலாகல புருஷன் வேலாயுதன் தானும் மாற்றாளொருத்தியைமுன் மணஞ் செய்தே யிருந்தாலும், கூத்தான கூத்தெல்லாம் குறவஞ்சியாப்பாடி மாற்றாள் முகம் கோணாமல் மணவாளனைத் தான்பெறுவள். பெற்றதோர் கணவனைப் பிரியாமலேகலந்து, கலவியது பிரியாமல் கானமயில் மேலேறி, மாற்றாளுந்தானும் மருகியவன் பக்கலிலே, ஒக்கவிருந்து உலகாள்வாள் வள்ளியம்மை. குறத்தியவள் சிறுக்கியம்மா, குறம்பேசி யுறவாடி, குறவஞ்சி தான் பாடி, உருக்காட்டி யுருவழித்து, ஊமைப்பிள்ளை யுளம்புகுந்து, தென்மதுரைப் பட்டணத்தில் திறை போட்டு மறைந்தாளையா!

---

III

மூன்றாங்குறம்.

மாமதுரைப் பட்டணத்தில் மீனாக்ஷி கோவிலுண்டு. கோபுரவாசல்நுழைந்தால் அங்கே கடைகள் மிகவுண்டு: பண்டு பலகாராதி பழக்கடைகள் தானுண்டு. பழமான பழங்களெல்லாம் பழுத்து நிறம் மிக விளங்க, உச்சிதமாயுள்ளக் கடையொன்று அங்கே யுண்டு. கையிலுள்ள காசதுவோ முக்கால்துட்டு!—மேலில்லை. முக்கால்துட்டுக்கு ஒரு கிச்சிலியை வாங்கப் போனேன். போன விடத்திலே கடைக்காரன் தான் மறைந்தான். கடையிலுள்ள பழம் பார்க்க, வாயில் ஜலம் ஊறலாச்சு. வித்விதமான பழங்களைப் பார்த்த பின்னர், கிச்சிலியின் மேலிருந்த ஆசை தானும் விட்டுப்போச்சு. மாதுளம் பழமதுவோ மனோகரமாய் விளங்கிறது! வாங்கவோ கையில் காசும்தான் போதாது. கடைக்கரரன் இருந்தாலும், "விலையென்ன ?" வெனக் கேட்பேன். கடைக்காரன் தானில்லை, விலைகொடுக்கக் காசுமில்லை. யாருமில்லா வேளையிலே, யேகாந்த வெளியதிலே, பழமொன்றைத் தான்திருடித் தின்னுவிட நினைத்தேனுள்ளே. நினைத்தேன் நினைவழியாமல், திடுக்கிட்டுப் பயந்து போனேன்! பயந்து நின்றே யானும் பார்க்கிறேன் சுற்றும் முற்றும்! கள்ளவிழி விழிக்கிறேனான் கனவுநனவ' அழியாமல். உள்ளவழி தானறிந்தும் உறுதியின்றித் தவிக்கிறேனான். பொறுமை தானில்லையம்மா, பொறுத்தாள்வார் தானுமில்லை. சிறுமையும் பெருமையும் என்னைச் சிரிப்பாணி செய்கிறது! பொறுமையுள்ள புருஷரல்லோ பொறுத்தாள்வார் தரணியையும். பொறுமை தான் வாராதோ, பொறுப்புந்தான் உடன் வாராதோ! பொறுமை பொறுமை யென்று பொருமுகிறேன் பாருலகில். சிறுமை பெருமை விட்டால் பொறுமை தானும் வாராதோ. இச் சூக்ஷ்மம் அறியாமல் இடருற்றுநான் தவிக்கிறேனே!" குறத்தி குறம்பாடிக் குறவஞ்சி [illegible], "குறைவு நிறைவற்றோரென்னைக் கூட வந்தால் சுகந்தருவேன். குறைவென்றும் நிறைவென்றும் பேசிவந்தால் உதை தருவேன்!"—என்று சொல்லி யிளங்குறத்தி குளக்கரையில் தான் மறைந்தாள்.

குளக்கரை யோரத்திலே கோயிலொன்று நிற்கிறது! கோயிலுக்குள்ளேசென்ற குறத்தியை நான் தேடிப்பார்த்தேன். இங்கு மங்கும் பார்த்து ஏங்கித் தவித்தேன் நான். வாயில்லா நாயனாரை வழிகேட்டு உளவறிந்து, சுரங்கவழியவர்காட்ட யிரங்கியதில் நான் நுழைந்தேன்.

காரிருள் மூடியங்கே கண்விழிக்கக் கூடவில்லை! திறந்த கண்கள் தான் மூடி, மூடினகண் திறக்கவுமே, ஏகாந்தமான வொரு இரகஸிய வழி தான் கண்டேன்.

"கண்டேன் கமழ்தரு கொன்றையினானடி"—
கொண்டேன குணங்குறியற்றதோர் கோன்செந்தி
உண்டேன் உண்மையி வின்னமு தருட்பால்
கண்டேன் குறத்தியைக் கொண்டவன் பக்கலில்!"

ஓம் சரவணபவ நமோநம:

முக்காலும் பழுத்தது முற்றவத் தாலே
எக்காலும் உன்னை ஏத்தித் தொழுவேன்
அக்காலும் இக்காலும் முக்காலுங் கூடி
எக்காலும் அற்று இருந்ததே வள்ளி!

ஓம்தத்ஸத்.

# STRAY LESSONS IN CIVICS.

## 3. CURRENCY.

## 3. செலாவணி.

அநேக நூற்றூண்டுகளுக்கு முன்னர் ஜனங்கள் கால்நடைகளைமாத்திரம் ஆஸ்தியாக வைத்திருந்ததாகவும், அவர்கள் அவைகளை ஓட்டிக்கொண்டு ஓரிடத்தில் நிலைபெற்று தங்கியிராமல் நாடோடிகளாய்த் திரிந்து வஸித்து வந்ததாகவும் பூர்வீக சரித்திரங்களினின்று புலப்படுகின்றது. அப்பேர்ப்பட்ட நிலைமையினின்றும் எவ்வாறு தற்கால செலாவணிபோன்ற நாணயங்கள் பண்டமாற்றும் விஷயங்களிற்கு நாளாவட்டத்தில் கொண்டுவரப்பட்டன வென்பதைச் சற்று விசாரிப்போம்.

பூர்வீக காலத்திய ஜனங்கள் தங்கள் கால் நடைகளினின்று கிடைக்கும் பால் முதலியனவைகளாலும், காடுகளில் வேட்டையாடிக் கொல்லப்பட்ட மிருகங்களை உணவாகக்கொண்டும் ஜீவித்துவந்தார்கள். நாளாவட்டத்தில் இவர்களுள் ஒருவனிடமிருந்து மற்றவன் மாடோ அல்லது வேறு ஏதாவது ஒன்றையோ வாங்கிக்கொள்ள நேர்ந்தது. ஆனல் சொந்தக்காரன் பிரதிபலனை அடையாமல் தனது சொத்தைத்தரமாட்டான் அல்லவா? இதற்காக ஜனங்கள் ஒன்றுகூடி சோழிகளை செலாவணி நாணயமாக உபயோகித்து வருவதென்று தீர்மானித்தார்கள். சில நாள்வரையில், கால் நடைகள், அல்லது வேறு சாமான்கள், அவைகளின் சிலாக்கியத்தை, அல்லது கிராக்கியை அனுசரித்து இவ்வளவு சோழிகள் விலை என்று தீர்மானிக்கப்பட்டுச் சிலகாலம் நடந்துவந்தது.

ஜனங்களுள் நாகரிகம் அபிவிர்த்தியடைய அடைய யுக்தியும், ஏற்பாடுகளும் விர்த்திக்குவருவது ஸஹஜமாதலால் சின்னாளுக்குப் பின்னர், நானுவிதமான உலோகங்களின் துண்டுகள் சோழிகளுக்குப் பதிலாகவாவது, அல்லது சோழிகளுடன் கூடவாவது சிலாவணியாக உபயோகமாகிவந்தது.

சிலநாள்களுக்குப் பின், உலோகங்கள் ஜாஸ்தியாக அடையப்பட்டதினின்றும் எல்லாத்துண்டு உலோகங்களும் நாணயமாக உபயோகித்தல் கூடாது. எந்தத் துண்டில் ஜனங்களது தற்காலத் தலைவன் குறியாவது முகமாவது பதிக்கப் பட்டிருந்ததோ அவைகளையே நாணயமாகக்கொள்ளல் வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது.

இவ்வேற்பாடும் சில காலங்களுக்குள் திருப்திகரமான தல்லவென்று காணப்பட்டது. ஏனெனில், உலோகத்தகடுகள் அனேகர்களால் துண்டுகள் செய்து அக்கிரமமாய் தலைவனது குறி முதலியன செதுக்கி செலாவணியாகச் செலுத்தப்பட்டு வந்ததைக் கண்டுபிடித்து சிக்ஷைக்குக் கொண்டுவருவது சிரமமாய் முடிந்தது.

ஆதலால், நாணயமாய் உபயோகிக்கும் உலோகத் தன் துண்டு, தலைவனது குறி இருக்கினும், இல்லாவிடினும் ஒரேவித கிராக்கியுடன் இருக்கின், பொய் நாணயங்கள் செய்வது இயலாது என்ற எண்ணத்துடன், ஒரே காலத்தில் பூரணமான மாறுதலை உண்டுபண்ணுமல், முன்னிருந்த நாணயங்களுடன் விலையர்ந்த செம்பு, வெள்ளி, தங்கம் முதலிய நாணயத் துண்டுகள் உண்டாக்கி உபயோகப்பட்டு வந்தன. இவ்வேற்பாடும் சில நாட்களில் திருப்திகரமில்லாமற் போயிற்று. ஏனெனின், இவ்விலை உயர்ந்த நாணயங்களும், நாளா வட்டத்தில் உண்டான ஜாஸ்தியான உலோகங்களின் வரத்தால் பொய் நாணயங்கள் அடிக்கப்பட்டதால் திருப்திகரமான செலாவணியாக ஆகவில்லை.

சர்க்காரால், பொய் நாணயங்கள் அடிப்பவர்களைக் கண்டுபிடித்து கடினமான தண்டனைக்கு உள்ளாக்குவதைத் தவிர வேறு விதமாய், சிலாவணியின் விருத்தியையும், கவ்ரதையையும் நிலை நிறுத்துவது முடியாதென்று கண்டு பொய் நாணயங்கள் செய்வோரைத் தண்டிக்கக் கடினமான சட்டங்கள் அக்காலத்திய அதிகாரிகளால் ஏற்படுத்தப்பட்டு நடந்து வந்தது.

மேற்கூறியதினின்றும், உலோகங்களின் இயற்கையான விலை அன்றியில், அரசனது முத்திரையே சிலாவணியின் மஹிமையாக ஊர்ஜிதப் பட்டதால், வெவ்வேறு அரசர்கள், தங்கள் தங்கள் இஷ்டப்படி உலோகத் துண்டுகளின்மேல் மாத்திரம் அல்லாமல், தோல், காகிதத் துண்டு முதலியனவைகளின் மேலும் தங்கள் தங்கள் முத்திரைவைத்துச் செலாவணியாகப் பரவச் செய்தார்கள். இவ்வேற்பாடு நாளாவட்டத்தில் தேசத்தை மிக்க ஏழமையாகச் செய்து விட்டது.

இந்துதேச சரித்திரத்தில் முஹம்மது பின்டோக்லாக் என்னும் புத்தியற்ற அரசன் அபரிமிதமாய் காகித நாணயங்களை அடித்துச் செலாவணிசெய்து தேசத்தை பாழ்செய்வித்தான் என்பது தெளிவாய்க் கூறப்பட்டிருக்கிறது. சூடுண்ட பூனை அடுப்பினிடம் போகாதல்லவா? அனுபவத்தினின்றும நாளாவட்டத்தில், கண்டபடி, தோல் நாணயங்களும், காகித நாணயங்களும் அடிப்பதால் உண்டாகும் கெடுதிகளை அறிந்த அரசர்கள், அப்பேர்ப்பட்ட நாணயங்கள் அடிக்கப்படினும், அந்நாணயங்களின் கவுரதையைக் காப்பதெங்ஙனமென்று யோஜிக்கத் தலைப்பட்டார்கள்.

இதற்கு முதல் முதல் உலோகத்தினால் ஆயிருக்கும் சிலாவணி நாணயத்தின் உதவியினாலன்றி, தோல் நாணயம் காகிதநாணயம் முதலியன சிலாக்கியப்படாதென்றும் நாணயமாக உபயோகிக்கப்படும், அரசனது முத்திரையுடன் கூடிய உலோகத் துண்டுகள், முத்திரையில்லாதபொழுது எவ்வளவு பொறுமோ அதைவிடச் சற்று மேலாகவிருக்கவேண்டுமேயொழிய இரண்டிற்கும் ஏராளமான தாரதம்மியமிருத்தல் கூடாதென்றும் ஏற்பட்டது.

தற்காலத்தில் கரன்ஸி நோட்டுகள் செலாவணியாக உபயோகிக்கப்பட்டு வருவது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே அல்லவா? ஐந்து ரூபாய் நோட்டுகள், 10 ரூபாய் நோட்டுகள், இருபதுரூபாய் நோட்டுகள், ஐம்பதுரூபாய் நோட்டுகள், நூறுரூபாய் நோட்டுக்கள், ஆயிரம்ரூபாய் நோட்டுக்கள் முதலியன தற்காலத்தில் ஏராளமாய்ச் செலாவணியாவது எல்லோருக்கும் தெரிந்திருக்கினும், மூஹம்மது பின்டோக்லாக் என்பவன் செய்ததுபோல் மன்மானியாய் அவைகள் அடிக்கப்படாமல் எவ்வித ஒழுங்குடன் அடிக்கப்பட்டு வருகிறதென்பது பெரும்பாலோர்களுக்குத் தெரியாது.

நம்மிடமிருக்கும் பணத்தை ப்ரமிஸரி நோட்டின் மேல் வேறொருவனுக்கு நாம் கொடுக்கும்பொழுது, அவன் பொறுமான ஆஸாமியா என்று பார்த்துத் தெளிந்து கொடுக்கிறோமல்லவா? கரன்ஸி நோட்டுக்களும் ஒருவித புரோ நோட்டுக்களே. யாரிடம் அந்நோட்டுக்களிருக்கின்றனவோ அவர்களுக்கு சர்க்கார் அதில் குறிப்பிட்டிருக்கும் தொகையைக் கொடுக்க உள்ளாவர் என்பது அதில் எழுதியிருப்பதினின்றும் நன்கு விளங்கும்.

சர்க்காராலும் நினைத்தபடி நோட்டுக்கள் அடிக்கப்படாமல் அவர்களது கஜானாவில் புதிதாய் அடித்து வந்த நாணயத் துண்டுகளின் ஜாமீன்மீது நோட்டுக்களை வெளியேற்றுகிறார்களே ஒழிய மஹம்மது டோக்லாக்கைப்போல் கையில் காசில்லாமல் நோட்டை அனுப்புவதில்லை. தற்காலத்தில் ஒவ்வொரு தடவையிலும் சர்க்காரால் வெளியனுப்பப்படும் கரன்ஸி நோட்டுக்கள் பூராவும் கொண்டுவந்து தொகை கேட்கப்படினும் கொடுக்க ஏற்பாடுசெய்யப் பட்டுத்தான் வெளியேற்றுவிக்கப்படுகிறது. ஆதலின் மஹம்மது பின் டோக்லாக் காலத்தைப்போல் அல்லாமல், நோட்டுக்கள் வைத்திருப்போர் எக்காலத்திலும், நமக்குத் தொகை கிடைக்குமென்றும், அப்படி சர்க்காரால் தொகைசெலுத்தத்தவறும்பக்ஷத்தில், சர்க்காராலேயே நியமித்துள்ள நியாய சபைகளில் பிரியாது செய்து தங்கள் தொகைகளை அடையலாகுமென்பதும் அநேகர்களுக்குத் தெரியாமலிருத்தலும் கூடும்.

தேசத்தில் நாணயங்களின் மிகுதியால் உள்ள கெடுதலைப்பற்றிக் கொஞ்சம்சொல்லி இவ்விஷயத்தை முடிப்போம்.

தேயத்தின் கண் செலாவணி நாணயங்களின் சங்கியை அதிகரித்திருக்கின் நன்மையோ தீமையோ வென்று கேட்கப்படின், அநேகர் நன்மை யென்று கூறுவார்கள் என்பது திண்ணம். ஆனால் வாஸ்தவத்தில் அது அவ்வாறு அல்ல. தேயத்தின் கண் நாணயங்களின் மிகுதியால் கஷ்டப்படுவோர் ஏழைச் சனங்களே. அவர்களிற் பெரும்பாலோர் கூலி வேலை செய்து ஜீவித்தலாலும், இந்தியாவில் கூலி ஆட்கள் இதர தேசங்களை விட சஹாயமாதலாலும், நாணய மிகுதியால் பதார்த்தங்களின் விலை அதிகமாய்க் காணப்படுவதினின்றும், ஏழை ஜனங்கள் தங்களது கூலியினின்று, நாணயங்களின் குறைவினால் எவ்வளவு சாமான்களை அடையலாகுமோ அவ்வளவை அடைய இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள் என்பது ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யப்படின் நன்கு விளங்கும். தனிகர்கள் ஒவ்வொருவரும், இவ்விஷயத்தைத் தெளிவாய்த் தெரிந்தறிந்து, தங்களால் இயன்ற உதவியை ஏழைக் குடிகளுக்கு இயன்று தேசத்தை விர்த்திக்குக் கொண்டுவர முயலவேண்டுமென்பது நம் கருத்து.

எம். என். கணேசய்யர்.

—:-:—

ஓம் ஸ்ரீ சாவித்திரியைநம:

# Sivayoga-Deepika.

## Chapter V.

### Part I. Ashtanga Nirguna Poojah.

## சிவயோகதீபிகையில்

## அமனஸ்கவிதான மென்கிற

### ஐந்தாவது படலம்.

### I. அஷ்டாங்க நிர்குண பூஜாவிதானம்.

——:-:——

(1) இன்னும், ஓ சிஷ்யனே, அதிரகசியமாய், சகல ஜ்யோதிகளுக்கும் இருப்பிடமாய், மஹத்தாயிருக்கும் திவ்யலிங்கத்தைப் பார்க்கத்தக்க அந்தர்லக்ஷியத்தைச் சொல்லுகின்றோம் கேள்.

2. (அப்படிக்கொத்த அந்தர்லக்ஷியமாவது) உள்ளும் புறம்பு மற்றதாய், அபரோக்ஷ ஸ்வரூபமாய் ஆகாசத்திற்குள் அந்தராகாசமேதுண்டோ அதுவே அந்தர்லக்ஷியம்.

3. (அவ்வந்தர்)லக்ஷியத்தில் மனதையும் வாயுவையும் லயம் பண்ணிச் சலனமில்லாமல் தாரகங்களில் நிறுத்தின யோகீசுவரன் ஜகத்குருவென்று சொல்லப்படுவன். இந்த லக்ஷியம் திடப்பட்டதே சாம்பவி முத்திரை யாகும். அதுவே கேசரி யெனப்படும்.

4. லோகத்திலே அந்தரகேசரி முத்திரையை அறியாமல் பாஹ்யகேசரீயைப்பிடித்து வைராக்கியத்தினால் நாக்குகளை யறுத்துக் கொள்வார்கள். அது வீண்பிரயாசமே யல்லாமல் பிரயோஜனமில்லை.

5. தாலுமூலத்தின் துவாதசாந்தத்திற்கும் மத்தியில் பிரத்தியக் கலையான தேஜஸ் உண்டு. அதிலே மனதை நிறுத்தி (தத்துவங்களை கிரமமாக ஹோமம்பண்ணவேண்டும்)(1)

6. இதற்கு திருஷ்டியானது பூர்ணிமா (பௌர்ணமீ) எனப்படும் பூர்ணதிருஷ்டியாகும். (அப்பார்வையில்) ஆரம்பத்தில் இருள் மயமாகத் தோற்றும். அதன் மத்தியில் மனதால் நிர்மலமாகிய ஜ்யோதிர்லிங்கத்தைப் பார்க்க வேண்டும்.(2)

7. அதெப்படி யென்றால், நாசிநுனியில் நிறுத்தி மூடுவதும் திறப்பது மில்லாத திருஷ்டியினாலே லக்ஷியம் வைத்துப் பார்க்கும் பொழுது (தாலுமூல துவாதசாந்த மத்தியில் உள்ளும் புறம்பும் நிறைந்து) தோன்றும் இருளின் மத்தியில் (கொஞ்சமும் சலனப்படாமல்) சதாசிவனைத் தேடும் சூக்ஷ்ம(மனோ) திருஷ்டியால் பார்த்தால் அப்பொழுது அகண்ட மண்டலாகாரமாய் (3) பிரஹ்மமாய் ஜ்யோதிஸ்வரூபமான (சிவலிங்கஸ்வரூபத்தை) தர்சனம் பண்ணலாம். இப்படி பிரஹ்ம தெரிசனம் பண்ணும் மகாத்மாக்கள் இந்த லோகத்திலே கிருதார்த்தர்களான யோகீசுவரர்களென்றறிக.

8. ஓ சிஷ்யனே, மேற்கு முகமாய் நிற்கும் (3a) பின்ன வளையாகாரமான ஆத்மலிங்கத்தைக் கிழக்கு முகமாயிருந்துபார். இது மகாச்சரியமாயிருக்கும்.

---

(1) சமஸ்கிருத மூலத்தில் "தன் ஹிருதயத்தில் மனதைக் கிரமமாகநிறுத்தி" என்று மாத்திரம் காணப்படுகின்றது.

2. மொழிபெயர்ப்புப் பிரதிகளில் பின்வருமாறு காணப்படும். "இதற்குக் கிரமமாவது: முந்தின திருஷ்டி பிரதமை, இரண்டாவது திருஷ்டி அமாவாசை, மூன்றாவது திருஷ்டி பௌர்ணிமை. இந்தப் பௌர்ணிமை திருஷ்டியினாலே நிர்மல ஜ்யோதிர் லிங்கத்தைப் பார்க்கவேண்டும்." இம்மொழிபெயர்ப்பானது மூலத்திற்கு ஒத்திராததால் மேற்கண்ட பிரகாரம் மொழிபெயர்த்திருக்கிறோம். இம்மூன்று திருஷ்டிகளின் லக்ஷணத்தை மண்டலப்பிராஹ்மணோபநிஷத் மொழிபெயர்ப்பில் பார்க்கவும்.

3. "சலனமற்றதாய், பரிணாமமற்றதான" எனவும் பாடம்.

(3a) "அபின்னவளையாகாரமாய்" என்பது சம்ஸ்கிருத மூலத்தின் பாடம்.

9. யாதொன்று ஆபோஜ்யோதியாய் ([4]) ஓம்கார ஸ்வரூபமாய், (சப்தபிரஹ்மஸ்வரூபமாய்) பிரஹ்மா விஷ்ணு சிவாத்மகமாய் சாந்தமாய் யோகீசுவரர்களால் சதாகாலமும் தேடத்தக்கதா யிருப்பதோ அதுவே விஷ்ணுவின் பரமபதம் எனப்படும்.

10. (இன்னும் லக்ஷியத்தைப் பார்ப்பதில் பேதங்களுண்டு. சொல்கிறோம் கேள்). அஃதெப்படியென்னில் (யோகீசுவரனுக்கு லக்ஷிய தரிசனகாலத்தில்) பூர்ணசந்திர பிம்பம்போலவும், மாணிக்க தீபம்போலவும், மத்தியான்ன காலத்து சூரியன்போலவும், அக்னி ஜ்வாலையைப்போலவும், மின்னல் கொடியைப் போலவும், இப்படி வெகு விசித்திரமான லிங்கசொரூபமானது நேத்திரத்திற்குமுன் லக்ஷியாந்தரத்தில் ([5]) (லக்ஷியத்தின் மத்தியில்)பிரகாசிக்கும்.

11. (இந்தப்பிரகாரமாக ஆத்மலிங்கத்தை தரிசனம் பண்ணின் யோகீசுவரனுக்கு) அந்நிய கர்மங்களினாலே என்ன பிரயோஜனம்? பிரயோஜனமில்லை. ஆகையால், ஓ சிஷ்யனே, நீயும் இந்தப்படி ஆத்மலிங்க தரிசனம் பண்ணிக்கொண்டு அஹிம்ஸை முதலான அஷ்ட (எட்டு) புஷ்பங்களால் ஆத்மலிங்கத்தை மானஸ பூஜை செய்.

12. (இப்புஷ்பங்க ளெவை யென்னில்) அஹிம்ஸை, இந்திரியநிக்ரஹம், (பூத)தயை, க்ஷமை (பொறுமை), ஞானம், தியானம், தபசு, சத்யம், என்பன. இந்த எட்டுவகை புஷ்பங்களினால் ஆத்மலிங்கத்தைப் பூஜைசெய்ய வேண்டும்.

13. (பின்னும் ராஜயோக லக்ஷியமாவது) மூடியும் மூடாத திருஷ்டியும் (பார்வையும்) ரேசகபூரகமாகிய போக்குவரத்தில்லாத வாயுவும், சர்வசம்சயங்களுமற்ற மனதும் எவனுக்குண்டோ அவனே ராஜயோகம் சித்தித்தவன்.

14. யாதாமொருவன் சிருங்காடகத்தில் மனதை நிறுத்தி சந்திரசூர்யர்களுடன் திரிகோணமார்க்கத்திற் பிரவேசித்து அந்தர்லீனமான வாயுவையும் பாஹிய திருஷ்டியையும் (வெளிமுகப்பார்வையையும்) நிறுத்த அறிந்தவனோ அவன் அஷ்டாவதானியான ஹடராஜயோகி ([6]) யெனப்படுவன்.

15. (ஓ சிஷ்யனே,) பார்வை, பார்க்கப்படும் பொருள், பார்க்கும்மனம், இம்மூன்றின் கூட்டுறவினால், உன்மனியின் முடிவானதும் ஜீவன்முக்தியைக் கொடுக்கத்தக்கதுமான அதிரகசியமான இந்த சிவயோகத்தை நீயும் அப்பியாசம் செய்.

16. (இன்னுமொரு விசேஷம் சொல்லுகிறோம் கேள்.) சூரியப்பிரகாசம், மின்னற்கொடி, புகை, பிந்துநாதகளைகள், நக்ஷத்திரங்கள், சூரியன், சந்திரன், தீபம், நேத்திரம், சுவர்ணம் (பொன்) தாமரைப்புஷ்பம், ([7]) அப்புஷ்பத்தின் கேசரங்கள், தண்டம், நவரத்தினங்கள், இவை முதலான அநேக பேதங்களும் ஆத்மலிங்க தரிசனத்திலே காணப்படும் (இவை சாதனகாலத்தில் சௌக்கியமென்றும் சாத்திய காலத்தில் விரோதமென்றும் அறியவும்.)

17. இன்னும் விசேஷம் சொல்லுகிறோம் கேள். மூலத்தில் ([8]) பிராணவாயுவை நிறுத்

---

4. இது காயத்திரி சிரசு என்கிற மகாமந்திரத்தின் லக்ஷியமாகிய சுக்ல தேஜோமய பிரஹ்மம். இதை மண்டலபிராஹ்மணோபநிஷத்திலும் அத்வயதாரகோபநிஷத்திலும் அமூர்த்தி தாரக யோகத்தின் லக்ஷியமாய்ச் சொல்லப்படும். "அவபாஸஜ்யோதியாய்" என்று சில மொழிபெயர்ப்புப் பிரதிகளின் பாடம்.

5. "லக்ஷியத்தின் ரந்திரத்தில்" என்பது சில மொழிபெயர்ப்புப் பிரதிகளின் பாடம்.

6. "ஹடராஜயோகி" [சிவராஜயோகி] என்றும் பாடமுண்டு.

7. சுவர்ணமயமாகிய தாமரைப் புஷ்பங்களென்றும் பொருள் கொள்ளலாம்.

8. "முகத்தில்" என்பது சமஸ்கிருதமூலத்தின் பாடம்.

திப்பூரித்து அக்னிமண்டலத்தில் அபானவாயுவை இழுத்துவைத்து, இரண்டையும் ஸ்திரப்படுத்தி தன்னுடைய இருகை விரல்களால், பெருவிரல் முதற்கொண்டு மூன்றுவிரல்கள் ஆகிய ஆறுவிரல்களாலும் காது, கண், மூக்கு ஆகிய அறுதுவாரங்களையும் அடைப்பதான ஷண்முகீகரணம் பண்ணினால், வெகுவித பேதங்களான பிரணவநாதத்திலே லீனமான சித்தத்தையுடைய யோகிகள் முன் சொல்லிய ஆத்மலிங்க விநோதங்களைப் பார்ப்பார்கள்.

18. (இன்னுமொரு விசேஷம் சொல்லுகிறேம்கேள்.) சூர்யன், சந்திரன், விளக்கு இவைகளுக்கு எதிரே யிருந்துகொண்டு இதுகளொன்றிலே லக்ஷியம் வைத்து சூர்ய சந்திரர்களாகிய இரண்டு நேத்திரத்தையுமொன்று படுத்திப் பார்க்க, நயனத்தின் அக்கிரத்தில் புத்தியில்லாதவர்களுக்கும் ஆத்மலிங்க விநோதங்கள் பிரகாசமாய்க் காணப்படும்; அவிவேகிகளுக்கு அப்படியானல் ஆத்ம ஞானிகளுக்கு சன்படியே பிரகாசிக்கும்.

19. பிரமாணத்திற்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டதாய் சாந்தமாய் தேஜோமயமாய் மனோவாக்குக் கெட்டாததான யாதொரு வஸ்துவுண்டோ அதுவே பரப்பிரஹ்ம ஸ்வரூபமென்று (அபரோக்ஷ) வித்துவான்களால் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றது.

20. சங்கல்ப விகல்பங்களில்லாத மகாச்சரியமான (8a) பரமயோகத்தை எவனடைவானோ அவனுக்கு உன்மனீ அவஸ்தை சித்திக்கும்.

21. இன்னும் ஆதார மத்தியமான ஹிருதயத்திலே வியாபகமும் (9) நாதபிந்து களைகளுக்கு அதீதமானதும் யாதொரு ஸ்வரூபமுண்டோ அதுவே பரம பதமெனப்படும்.

22. (இப்படிக்கொத்த பரமபதமானதும்) நிராசிரயமானதும், நிராலம்பமானதும், அவ்வியயமானதும், நிராமயமானதும், பாவனைகளற்றதுமாகிய பரமசிவ ஸ்வரூபமான தத்துவமேதுண்டோ அதை சுத்த மனதினால் ஹிருதயத்தில் எவன் பஜனை பண்ணுவானோ (10) அவன் அதன் மயமாவான்.

22. அப்படிக்கொத்த யோகீசுவரனுக்கு அணுவளவேனும் உண்டு இல்லை என்னும் அறிவுண்டாகில் அதுவே பந்தத்திற்குக் காரணமாகையால், பாவ அபாவங்கள் இரண்டையும் தள்ள வேண்டும்.

24. பின்னையும் ஞானம் (அறிவு), ஞேயம் (அறியப்படும் பொருள்), தியானம், தியேயம் (தியானிக்கப்படும் விஷயம்), லக்ஷியம் அலக்ஷியம், பாவம் அபாவம், மனனம் அதனின்மை, திருக்கு (பார்வை), திருசியம் (பார்க்கப்படும் பொருள்) இந்த பேதங்களெல்லா வற்றையும் விட்டவன் ஜீவன்முக்தன்.

25. அப்படிக்கொத்த யோகீசுவரன் சர்வாவஸ்தைகளிலும் பிரயத்தினமின்றி நிச்சிந்தை பாவத்தையடைந்து (11) இறந்தவனைப் போலிருப்பன். அலையற்ற சமுத்திரத்தைப்போலவும் தத்துவமயனாகி (பிரஹ்ம ஸ்வரூபமயனாகி) ஆனந்தத்தில் மூழ்கியிருப்பன்.

26. அஷ்டாங்க நிர்க்குண சிவபூஜாவிதானம். ஓசிஷ்யனே, சர்வ சாஸ்திரார்த்த சாரமாய், மகா ரகசியமாய் உடனே முக்தியைக் கொடுக்கத் தக்கதாகிய சித்ரூபமாகிய சிவத்தின் பூஜாவிதியைச் சொல்கிறேன் கேள்.

27. சகலசிந்தனையு மில்லாதிருப்பதே சிவத்தியானம்; சமஸ்த கிரியைகளு மில்லாதிருப்

---

(8a) "பாவயோகத்தை" என்பது மூலத்தின்பாடம்.

(9) "ஆதாரமத்தியிலும் ஹிருதயத்திலும் வியாபித்திருப்பதும்" எனவும் மொழிபெயர்க்கலாம்.

(10) "அடைவானோ" என்பது சம்ஸ்கிருத மூலத்தின் பாடம்.

(11) அதாவது அமனஸ்கபாவம், மனமிறந்த ஸ்திதியென்றவாறு. மொழிபெயர்ப்பு பிரதிகளில் "நிச்சய பாவத்தை" என்பது பாடம்.

பதே சிவபூஜை; சலன மில்லாதிருப்பதே பிரதக்ஷிணம்; ஸோஹம்பாவனை பண்ணுகிறதே நமஸ்காரம்.

28. மௌனமா யிருப்பதே கீர்த்தனம்; பரிபூரண பாவனையே ஜபம்; கிருத்தியம் (செய்ய வேண்டுவது), அகிருத்தியம் (செய்யக் கூடாதது) இவை யிரண்டையு மறியாமலிருப்பதே சீலம் (ஒழுக்கம்); சமதரிசனமே நிர்வாணம் (பூஜையின் முடிவு). (இவை யெட்டும் அஷ்டாங்க நிர்குண பூஜாவிதான மெனப்படும்.)

(இன்னும் வரும்.)

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.

———:-:———

ஓம் ஸ்ரீசாவித்திரியை நம:

# உபநிஷதர்த்த தீபிகை.

## 8. ஆத்மோபநிஷத்.

———:-:———

1. [பிரஹ்மா சொல்கிறார்] ஓ அங்கிரஸே, புருஷன் பாஹ்யாத்மா (வெளியாத்மா,) அந்தராத்மா (உள்ளாத்மா,) பரமாத்மாவென மூவிதமாவான்.—தோல், சர்மம் (தோலின் மத்ய பாகம்) (கை) நகங்கள், மாம்சம், மயிர், கட்டைவிரல், மற்ற விரல்கள், பின்பாகம், (கால்) நகங்கள், குல்பம் (மணிக்கட்டு,) வயிறு, நாபி, மர்மஸ்தானம், கடிபாகம், துடை, கன்னம், இருபுருவங்கள், நெத்தி, இருகைகள், பார்சுவம் (பக்கம்,) தலை, கழுத்து, கண்கள், காதுகள், என்றுள்ள இவைகள் பாஹ்யாத்மாவாகும்.

2. அந்தராத்மாவாவது—பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், இச்சை, துவேஷம், சுகம், துக்கம், காமம், மோஹம், விகல்பனம், முதலியவைகளாலும், ஸ்மரணம் (ஞாபகம்,) உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதம் (என்கிற ஸ்வரங்கள்) குறில் நெடில் ப்லுதம் (குறிநெடில்) என்கிற ஸ்வரமாத்திரைகள், ஸ்கலிதம் கர்ஜிதம் ஸ்புடிதம் (என்னும் அக்ஷர உச்சரிப்பிலுண்டாகும் தோஷங்கள், சந்தோஷம், நிருத்தியம், கீதம், வாத்தியம், பிரளயம், விளையாட்டு முதலியவைகளாலும், எந்த விஞ்ஞாநாத்மாவான புருஷன் கேட்போனாகவும், முகர்வோனாகவும், ருசிப்போனாகவும், நினைப்போனாகவும், அறிவோனாகவும், கர்த்தாவாகவும் (இருக்கின்றானோ), (எவன்) புராணம், நியாயம், மீமாம்சை, தர்மசாஸ்திரங்கள் இவைகளைக் கேட்டல், மோர்தல், இழுத்தல் முதலான கர்மங்களைச் செய்கிறானோ அவன் அந்தராத்மா எனப்படுவன்.

3. பரமாத்மாவாவது—உபாசிக்க வேண்டுவதான அக்ஷரம் எதுவோ அது. அது (அப்பரமாத்மா) பிராணயாம, பிரத்தியாஹார, தாரண, தியான, சமாதி (ரூபமான) யோகம், அனுமானம், அத்யாத்ம சிந்தனை (இவைகளால் பிரகாசிக்கும்). ஆலம் வித்து (ப்போலும்), சியாமாக அரிசி(யைப்போலும்) மிக சூக்ஷ்மமாய் இருந்தும் பெரிய மரம் உண்டாகக் காரணமாகும்). (மிருகத்தின்) வாலின் நுனியில் லக்ஷத்திலொரு பாகம் எனச் சொல்லப்பட்ட விகர்பங்களாலும் அடையக் கூடியவனல்லன், அறியக் கூடியவனல்லன்.(சகலத்திற்கும்) சாக்ஷியாய் நிர்க்குணனாய் இருந்துகொண்டு, பிறப்பதுமில்லை, இறப்பதுமில்லை, வளர்வதுமில்லை (குறைவதுமில்லை), எரிகிறதில்லை, நடுங்குவதில்லை (பயப்படுவதில்லை) உடைவதில்லை, வெட்டுப் படுவதில்லை. சுத்தன், நிரவயவன் (அவயவமற்றவன்), கேவலன், சூக்ஷ்மன், நிஷ்களன், நிரஞ்சனன், அபிமான மற்றவன், சப்தஸ்பர்ச ரூபரச கந்தங்களற்றவன், நிர்விகல்பன், ஆசை யற்றவன், சர்வவியாபி, சிந்தனைக் கெட்டாதவன், வர்ணிக்கக் கூடாதவன். அசுத்தர்

களையும் சண்டாளர்களைப்போல் சுவபாவமாகவே சுத்தமில்லாதவர்களையும் அசுத்தர்களையும் (கெட்ட கர்மங்களாலும் பாபங்களாலும் அசுத்தமாகினவர்களையும்) சுத்தம் செய்கின்றான். நிஷ்க்ரியன் (தொழிலற்றவன்). (அவனிடம்) சம்ஸ்காரம் இல்லை. சம்ஸ்காரம் இல்லை * இவனே புருஷன் என்கிற பரமாத்மா.

[குறிப்பு.] நாராயணரின் உரைப்படி உபநிஷத் இவ்விடம் முடிகின்றது. ஆகிலும் தென் தேசத்துப் பிரதிகளில் இதன் பிறகு 3, சுலோகங்களுண்டு.

சரீரத்தினிடம் விரக்தியுள்ளவனுக்கு பரமாத்மாவை யுபதேசிக்கும் நிமித்தம் இவ்வுபநிஷத் ஏற்பட்டது. சந்திரனைக்காட்டுவோன் வேண்டியொருவன் மரத்தின் கிளைகளைக்காட்டி அவைகளினிடையில் சந்திரனைக்காட்டுவது போல, (இது வடமொழியில் சாகாசந்திர நியாயமெனப்படும்) முதலில் ஸ்தூல தேஹத்தை பாகியாத்மாவென பெயரிட்டுக் காட்டி, பிறகு அந்தக்கரணங்களை விஞ்ஞானத்மனாகிய புருஷனென்றும் அந்தராத்மா வென்றும் காட்டி, இவைகளுக்கு அந்தர்யாமியான சம்சார ரஹிதரான பரமாத்மாவைக் கடைசியில் உபதேசிக்கின்றது. நாராயணர் ஆகம சாஸ்திரத்தில் சரீரம், அந்தக்கரணம், ஜீவாத்மா, பரமாத்மாவென நால்வகை சொல்லியிருக்கின்றதென்றும், இவ்வுபநிஷத்தில் ஜீவாத்மாவையும் பரமாத்மாவையும் அபேதமாக வைத்து பரமாத்மா லக்ஷணமே சொல்லியிருக்கின்றதென்றும் உரையில் சொல்கிறார்.

4. ஆத்மாவென்று சொல்லப்பட்டவரும், சிவகரமானவரும் (மங்களத்தைச் செய்பவரும்) சுத்தரும் ஏகமேயானவரும் அத்வயரும்(இரண்டற்றவருமான) கேவலப் பிரஹ்மமே எக்காலமும் பிரஹ்மரூபமாகப் பிரகாசிக்கின்றார்.

5-6. ஜகத்து ரூபமாக அப்பிரஹ்மமே பிரகாசிக்கின்றது. வித்தியை அவித்தியை முதலிய பேதத்தாலும், பாவம் அபாவமுதலிய பேதத்தாலும் குரு சிஷ்யன் முதலிய பேதத்தாலும் அப்பிரஹ்மமே பிரகாசிக்கின்றது.

7. தத்துவ தரிசனத்தில் (உண்மையான அனுபவமுண்டான காலத்தில்) கேவலமும் சுத்தமுமான பிரஹ்மமே இருக்கின்றது. வித்தையென்பது மில்லை. அவித்தையென்பதுமில்லை. ஜகத்துமில்லை, மற்ற ஒன்றும் இல்லை.

8. ஜகத்து சத்தியமாகத்தோற்றுதல் சம்சாரத்தில் பிரவிர்த்திக்குக் காரணம். அது அசத்தியமாகத் தோற்றல் சம்சாரத்தினின்றும் நிவர்த்திக்குக்காரணம்.

9. இது கடம் என்றறிவதற்கு எது (எந்தபிரமாணம்) இருக்கும்பக்ஷத்தில் பதார்த்தத்தின் (அதாவது கடமாகிய பொருளின்) ஞானம் உண்டாகுமோ (அப்படிப்பட்ட) நல்ல பிரமாண மில்லாவிட்டால் என்ன நியமத்தை யபேக்ஷிக்கிறது.

[குறிப்பு] இச்சுலோகத்துக்கு உரை ஒருவாறாக எழுதியிருக்கிறது. இதன்பொருளென்னவென்றால் ஓர் பதார்த்தத்தை யறியவேண்டில் பிரமாணமின்றி யறியக்கூடாது. பிரத்தியக்ஷ வஸ்துவாகிய கடத்தையறிவதற்கு பிரத்தியக்ஷப் பிரமாணமேபோதும். அது நேரில் கண்ணுக்குப் புலன்பட இராவிட்டால் அநுமானபிரமாணத்தால் அறியலாம். பிரஹ்மமோ அவ்விதம் பிரத்தியக்ஷவஸ்துவல்லவாதலால் அதற்கும்ஓர்வித பிரமாணம்வேண்டும். அப்பிரமாணம் சுருதியே. அதுவின்றி பிரஹ்மத்தின் ஸ்வரூபலக்ஷணம் சொல்லுவதில் ஓர் நியமமும் ஏற்படாமல் மனம்போனபடி கல்பனையாகச் சொல்வதாக ஏற்படும். இவ்வேதப் பிரமாணத்தையே ஆப்தவாக்கிய பிரமாணமென்று சேர்த்து பிரமாணம் மூன்றுவிதமாக நியாயசாஸ்திரத்தில் பிரதிபாதிக்கப்படும்.

10. நித்திய சுத்தனாயிருக்கும் இவ்வாத்மா (ஆத்ம சாக்ஷாத்காரத்துக்கு சாதனமான) பிரமாணம் இருக்கும் பக்ஷத்தில் பிரகாசிப்பன். தேசத்தையாவது, காலத்தையாவது சுத்தத்தையாவது அபேக்ஷிப்பதில்லை.

[குறிப்பு] ஆத்மசாக்ஷாத்காரத்துக்கு உதவியாகிய சுருதி மஹாவாக்கியமாகியப் பிரமாணத்தை விசாரித்து அறிய, அம்மஹாவாக்கிய வாயிலாக

* நிஷ்கிரியனாகிய அவனுக்கு சம்சாரமில்லை யென்று பாட பேதமுண்டு.

முமுக்ஷுவின் அறிவில் ஆத்மா பிரகாசமாவார். அதாவது அபரோக்ஷமாய் அறியப்படுவர். அவ்வாத்மானுபவமாதற்கு இது ஒன்றை மாத்திரம் அபேக்ஷிப்பதேயல்லாமல் புண்ய க்ஷேத்திரம், புண்யகாலம், வேறு தேசசுத்தம் முதலியவைகளை யபேக்ஷிப்பதேயில்லை யென்பது பொருள்.

11. நான் தேவதத்தன் என்கிற ஞானம் ஒன்றையும் அபேக்ஷிக்காதது. அதைப்போலவே பிரஹ்ம வித்துக்கும் (பிரஹ்மத்தை யறிந்தவனுக்கும்) நான் பிரஹ்மம் என்கிற ஞானம். (ஒன்றயும் அபேக்ஷிக்காததாயிருக்கும்).

[குறிப்பு] முன் இரண்டு சுலோகங்களில் முமுக்ஷுவுக்கு வேதமாகிய பிரமாணமின்றி பிரஹ்ம சாக்ஷாத்காரம் உண்டாகாதென்று சொல்லி, இப்பொழுது பிரஹ்மானுபவ மடைந்தவனுக்கு அவ்விதப் பிரமாணமொன்றும் அவசியமில்லை யென்று சொல்லுகிறது. நான் தேவதத்தன் என்று ஒருவன் அறிய எவ்விதம் ஓர் பிரமாணமும் அவசியமில்லையோ அவ்விதம் பிரஹ்மஞானியின் அறிவும் ஸ்வதஸ்ஸித்தமாயிருப்பதால் அவனுக்கு ஓர் பிரமாண முமவசியமில்லை என்பது பொருள்.

12. எவனுடைய பிரகாசத்தால் சகல ஜகத்தும் சூரியனல் போல் பிரகாசிக்கப்படுகின்றனவோ, அவனை எவ்விதம் ஆத்மாவல்லாததாயும், அசத்தாயும், துச்சமாயும் இருப்பது பிரகாசிப்பிக்கும்.

[குறிப்பு] பிரமாணங்களெல்லாம் ஜகத்தில் சேர்ந்தனவாதலால் பிரஹ்மமே தானான ஞானிக்கு எவ்விதம் அவை அவன் ஞானத்திற்கு உதவியாயிருக்கும் என்றவாறு.

13. வேத சாஸ்திர புராணங்களும் சகலபூதங்களும் எவனல் அர்த்தவத்தாய் பொருளுடைத்தாய் இருக்கின்றனவோ, இவைகளையெல்லாம் அறிபவனாகிய (எல்லாவற்றிற்கும் சாக்ஷியாகிய) அவனை இவைகள் எவ்விதம் பிரகாசம் செய்யும்.

[குறிப்பு] அர்த்தவத் என்றால் அர்த்தத்தோடு கூடினதென்றும் சத்தோடு கூடின தென்றும் சொல்லவேண்டும்: வேதசாஸ்திரங்கள் பிரஹ்மத்தால்தான் அர்த்தமுள்ளனவாகின்றன. சகல ஜகங்களும் பிரஹ்ம சத்தையினிடம் தோற்றமானதாலும் பிரஹ்மம் அதிஷ்டானமாயிருப்பதாலும்தான் அவைகளை பொருளெனமதிக்கக்கூடும். அர்த்தம் என்பதற்கு பொருள் என மொழிபெயர்த்தால் இரண்டு தார்பர்யமும் த்வனிக்கும்.

14. தேஹ சிரமத்தையும் பசியையும் பாராட்டாமல் எவ்விதம் ஓர் பாலனானவன் (விளையாட்டு) வஸ்துவினிடம் கிரீடைசெய்வானோ, அவ்விதமே வித்வானும் (பிரஹ்ம ஞானியும்) (உண்மை வஸ்துவில்) மமதை யற்றவனாயும், அஹமற்றவனாயும் ரமிப்பான்.

[குறிப்பு] மமதையற்றவன் என்றால் தனது என்கிற பாஹ்ய விருத்தியற்றவன். அஹமற்றவன் என்றால் அஹம் என்கிற அந்தர் விருத்தியுமற்றவனெனப் பொருள்.

15. நிஷ்காம ரூபியாயிருந்து காமங்களை (அனுபவித்துக் கொண்டு), தன்னாத்மாவினிடமே எப்பொழுதும் சந்தோஷத்தை யடைந்தவனாய், தான் ஸர்வத்திற்கும் ஆத்மாவாய் நிற்பவனாய், முனியானவன் ஏகசரனாய் (=பிரஹ்மமொன்றிலேயே மனோவிருத்தியை யுடையவனாய்) சஞ்சரிப்பான்.

[குறிப்பு] 'காமான்' என்று பதம் பிரித்து மொழிபெயர்த்திருக்கிறது. 'காமாத்' என்று பதம்பிரித்தால் காமத்தினின்றும் விடுபட்டு நிஷ்காம ரூபியாகி யென்று சுலோக ஆரம்பத்திற்குப் பொருளாகும்.

16. தன மில்லாதவனானாலும் எப்பொழுதும் சந்தோஷ முள்ளவனாய், உதவியற்றவனானாலும் பலமுள்ளவனாய், சாப்பிடாவிட்டாலும் நித்ய திருப்தனாய், சமான மற்றவனானாலும் சமதர்சன முள்ளவனாய் (இருப்பன்).

17. அவன் (கர்மங்களை) செய்தபோதிலும் செய்யாதவனாய், பலன்களை யநுபவித்த போதிலும் அநுபவிக்காதவனாய், சரீரமுடையவனாகியும் சரீரமற்றவனாய், பரிச்சின்னனானாலும் சர்வ வியாபியாய் (இருப்பன்).

[குறிப்பு] ஞானியானவன் கர்த்தா, போக்தாவைப் போலும் பரிச்சின்னமான சரீரம், மனம் இவைகளோடுகூடினவனும் லோகத்திற்குத் தோன்றின போதிலும் உண்மையில் அவன் அப்படியல்லன் என்பது பொருள்.

18. அசரீரியாயும் எப்பொழுதும் சத்ரூபமாயும் இருக்கும் பிரஹ்ம ஞானியை பிரியம் அப்பிரியம் சுபம் அசுபம் என்னும் இவைகள் ஒருகாலத்திலும் தொடுவதில்லை.

19. சூர்யன் இருளினால் (ராகுவால்) பிடிக்கப் படாதவனானபோதிலும், பிடிக்கப்பட்டதுபோல் தோற்றுவதால் ஜனங்களால் அவன் பிடிக்கப்பட்டான் என்று பிராந்தியால் வஸ்து (உண்மை) லக்ஷணத்தை யறியாமல் எப்படி சொல்லப்படுமோ,

20. அவ்விதம் தேஹம் முதலிய பங்களினின்றும் விடுபட்ட பிரஹ்ம ஞானியை, (அவனுடைய) சரீரத்தைப் பார்ப்பதால் மூடர்கள் அவனை தேஹத்தோடு கூடினவனென்றே பார்க்கின்றார்கள் (அறிகின்றார்கள்)

21. சட்டையுரித்த பாம்பைப்போல் (ஞானியானவன்) தேகத்தை விட்டவனாய் நிற்பான். அவன் தேகமோ (பாம்புச்சட்டையைப்போல்) பிராணவாயுவால் இங்கு மங்கும் கொஞ்சம் சலிக்கப்பட்டதாய் நிற்கும்.

22. எவ்விதம் ஓர் கட்டையானது நீரால் மேடுபள்ளமுள்ள ஸ்தலங்களுக்குக் கொண்டுபோகப் படுகின்றதோ அவ்விதம் தேகமும் காலத்தால் வரும் (சுகதுக்க) போகங்களில் தைவதத்தால்(பலனைக்கொடுக்க உள்முகமாயிருக்கும் கர்மத்தால்) செலுத்தப் படுகின்றது.

23. லக்ஷியம் அலக்ஷியம் (பார்வைக்கு உட்பட்டதும் உட்படாததுமான) இவைகளின் கதியை(வழியை) விடுத்து எவன் கேவல ஆத்மத்தோடு (ஒன்றுபட்டு) நிற்பானோ அந்த பிரஹ்மஞானியாகிய உத்தமன் தானே சாக்ஷாத் சிவனே (யாவன்).

24. ஜீவிக்கையிலேயே எப்பொழுதும் முக்தனும் கிருதார்த்தனு மிருக்கும் பிரஹ்மஞானி உபாதி நாசத்தால் பிரஹ்மமாகவே யிருந்துகொண்டு அத்வயமாகிய (இரண்டற்ற) பிரஹ்மத்தை விதேஹமுக்தியில் அடைகிறான்.

25. வேஷதாரியானவன் வேஷமுள்ளபொழுதும் இல்லாத பொழுதும் ஒரே புருஷனாயிருப்பதுபோல், பிரஹ்மஞானிகளில் சிரேஷ்டனானவன் சதாகாலமும பிரஹ்மமே யல்லாமல் வேறல்ல.

26. கடம் உடைந்தபோது எவ்விதம் (கட) ஆகாசம் தானே (மஹா) ஆகாசமாகுமோ, அவ்விதம் உபாதிகள் லயமான பிறகு பிரமஞானி தானே பிரஹ்ம மாகிறான்.

27. பாலில் விடப்பட்டபாலும், எண்ணெயில் விடப்பட்ட எண்ணெயும், ஜலத்தில் விடப்பட்ட ஜலமும், எவ்விதம் சேர்ந்து ஒருமையை அடையுமோ, அவ்விதமே ஆத்மஞானியாகிய முனீசுவரனும் ஆத்மாவில்(ஒருமையை யடைகிறான்).

28. இந்தப்பிரகாரம் விதேக கைவல்யமாகவும், சத்தாமாத்திர ஸ்வரூபமாகவும், அகண்டமாகவும் (பிரிவினையற்றதாகவும் உள்ள) பிரஹ்ம பாவத்தை (ஸ்வரூபத்தை) அடைந்த யதியானவன் மறுபடியும் (சம்சாரத்தில்) திரும்புவதில்லை.

29. சதாகாலமும் ஆத்ம ஸ்வரூபஞானத்தால் கொளுத்தப்பட்ட அவித்யை முதலியவைகளையும் சரீரங்களையு முடைய இவனே பிரஹ்மமாயிருப்பதால் பிரஹ்மத்துக்கு (பிரஹ்மமேயாகிய பிரஹ்ம ஞானிக்கு) எவ்விதம் பிறப்பு உண்டாகும்

30. எவ்விதம் கிரியையில்லாத புழுதையிடம் சர்ப்பத்தின் தோற்றமும் அதன் நீக்கமுமோ அவ்விதமே பந்தமும் மோக்ஷமும்

மாயையால் கல்பிக்கப்பட்டவைகள் ; உண்மையாய் ஆத்மாவினிடம் அவைகளில்லை.

31. ஆவரணத்தின் இருப்பாலும் இல்லாமையாலும் தான் பந்தமும் மோக்ஷமும் சொல்ல வேண்டிவரும். பிரஹ்மத்துக்கோ யாதொரு ஆவரணமுமில்லை; அதைத்தவிர வேறில்லாமையால் அது ஆவரணமற்றது.

[குறிப்பு] இவ்விடம் ஆவ்ருதேঃ என்றுபாடம் கொண்டு மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. "அவ்விருத்தேঃ" என்கிற பாடப்படி விருத்தி உண்டாவதாலும் இல்லாமையாலும் பந்தம் மோக்ஷமென்கிற பாகுபாடும் வியவகாரமும் ஏற்படும் என்று பொருள் சொல்லவேண்டும்.

32. வஸ்துவினிடத்தில் (அது) இருக்கின்றது என்கிற ஞானமும், இல்லையென்கிற ஞானமும் இவை (இரண்டும்) புத்தியின் குணங்கள்; நித்யமாகிய வஸ்துவினது அல்ல.

33. நிஷ்களமாயும், கிரியையற்றதாயும், சாந்தமாயும், தோஷமற்றதாயும், நிரஞ்சனமாயும் (மாயை, அவித்யையாகிய இருமையற்றதாயும்) அத்துவிதீயமுமான பரதத்துவத்தினிடத்தில் ஆகாயத்தைப்போல் கற்பனை எங்ஙனம்.

[குறிப்பு] ஆகாசம் நிர்மலமாயிருந்தும் ஓர் நீலவர்ணம் அதினிடம் இல்லாமலிருந்தாலும் நமது பார்வைக்கு மாத்திரம் தோற்றுவதுபோல், நிர்மலமாகிய பரவஸ்துவினிடம் ஜகத்து உண்மையாயில்லாவிட்டாலும் ஆகாசத்தில் நீலவர்ணம்போல் கல்பனைமாத்திரமாய்த்தோற்றும். இச்சுலோகத்துக்கு ஆகாயத்தைப் போல் நிர்மலமான பரதத்துவத்தினிடம் என்று வேறு விதமாகவும் சொல்லலாம்.

34. நாசமுமில்லை உத்பத்தியுமில்லை, (அஞ்ஞானத்தால்) பந்தப்பட்டவனுமில்லை, (ஞான) அப்பியாசியுமில்லை. முமுக்ஷுவுமில்லை (மோக்ஷத்தை விரும்புவோனுமில்லை), முக்தனுமில்லை என்கிறதே பரமார்த்ததை (உண்மை).

மு. கோ. நாராயணசாமி ஐயர்.



# The*Pluperfection of Ponnammal.

## A Metapsychic Tale from Real Life.

## பொன்னம்மாள் குறைநிறை.

"தத்துவாதீதமானதோர் திவ்யகதை."

---:-:---

"I am not a judge of 'character' much less do I wish to take the "responsibility" of doing so even if I can, as a 'peace-maker' myself, unless in a formal way as an astrologer. The Great God is the Great Judge and the Law of Karma is His Justice".—*A personal friend in a private note to the author.*

"உள்ளதோ பிறப்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பது மொத்தபோது நாதமாங்
கள்ளவாசலைத்திறந்து காணவேண்டு மாந்தரே."

—சிவவாக்கியர்.

"என்னு மென்னு மென்னுதே! பொன்னும் பொன்னும் பொன்னுமே!" என்பது பெரியோர் வாக்கியம். பக்தியில்லா மாந்தர் பதங்குலைந்து சீரழிவர். பக்தியென்றால் என்ன? அதன்முடிவுயாது?

"கற்பனையற்றுக் கனல்வழியே சென்று
சிற்பனையெல்லாஞ் சிருட்டித் பேரொளிப்
பொற்பினைநாடிப் புணர்மதியோடுற்றுத்
தற்பரமாகத் தகுந்தண் சமாதியே."---திருமந்திரம்.

பக்திவழி சென்றார்க்கு முக்திவழி தானேவரும். இதற்குதாரணம் இவ்விஷயத்தின் முகப்பில்கூறியுள்ள சிவவாக்கியர் மனைவியே யென்று சொல்லலாம். மற்றொருதாரணம் திருவள்ளுவர் மனைவியாம். இவர்கள் என்னசெய்தார்கள்? பதிவிருதா தர்மத்தை யனுசரித்தார்கள். பதிவ்ரதமென்று லென்ன? பதிவழிபற்றிப் பசுநெறியொழித்துப் பரிபக்குவ மிகுதியால் திரிம

* [*Pluferfect*, from Latin, *plus*=more+*perfect.*] Here *Pluperfection* means Transcendental Perfection—Refering to the state of Ineffable Bliss beyond *Unmanas.*

லக்திர்ந்து தானவனுதல். திருக்குறள் உரையாசிரியரான பரிமேலழகர் "விரதம்" என்பதற் குரைகூறியிருப்பதில் "இன்னவறஞ் செய்வலெனவும் இன்னபாவம் ஒழிவலெனவும் தம் மாற்றலுக்கேற்ப வரைந்துகொள்வது விரதமா" மென்று கூறியிருக்கிறார்.

"ஈதல் அறம்" என்றார் ஔவையாராதலின், தன்னைக்கொடுத்தல் ஒன்றே அறம். தன்னைக் கொடுக்க ஆற்றார், தனதென தென்னக் கொண்டாடும் பொருளைக் கொடுப்பர். "தீவினைவிட்டீட்டல் பொருள்" என்றாரானதால், தர்மவழியே தேடினதுதான் "பொருள்" எனப்படும். போக போக்கியங்களுக்கு உண்மையில் ஒத்ததாயிருப்பதும் அதுவே. அப்படிக்கின்றிக் "கடைத்தேங்காயை யெடுத்து வழிப்பிள்ளையாருக் குடைத்தவனது ஈகை "அறம்" ஆகாது. யஜ்ஞத்தின் உட்பொருளாயிருப்ப தொன்றெதுவோ அதுவே "அறம்". இந்த அறத்தைச் செய்யவேண்டிய தவசியமென வற்புறுத்துவான்றனே "தர்மம் சர" என்னும் வேதவாக்குப் பிறந்தது. தர்மத்திலெல்லாம் ஸ்வதர்மம் சிறந்தது. இந்த ஸ்வதர்மம் முவ்வகைத்தாய் நிற்கும். அவை:—1. தேஹதர்மம்; 2. மனோதர்மம்; 3. 'அத்யாத்மகம்' என்று சொல்லும் ஸ்வாத்மதர்மம் அல்லது ஜீவதர்மம். இம்மூன்றும் மூவித யாககுண்டங்களாய் அமைந்து அதன் தர்மஸ்வரூபம் யாகாக்னியாகவிருந்து திரிபுரவாசியாகிய மனிதனைத் தஹித்துவரும். இவற்றில், (1) தேஹதர்மம் தஹிக்கப்பெறுதலாம். இது ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், அத்யாத்மிகம் எனச்சொல்லப்படும் தாபத்திரயங்களாலும் தஹிக்கப்பெறும். ஆதிபௌதிகம் என்பது புலி, பாம்பு போன்ற ஜந்துக்களால் தேஹத்துக்குண்டாகும் துன்பங்களாம். இவை தேஹோஹபாவனை நீங்கினவர்களைத் தஹிக்காவாம். ஆகவே "தேஹோஹம்' என்கிற ஸ்தூல பாவனையே இவற்றால் தஹிக்கப்படுவதாகும்.

ஆதிதைவிகமென்பது மின்னல், இடி, மழை, வெள்ளம் பஞ்சம்போன்ற தைவிகாத்மக ஸ்வபாவங்களால் நேரும் துன்பங்கள். இவை "தேஹோஹ பாவனை"யில் ஸ்தூலம் நீங்கினவர்களையும் பாதிக்கும். எப்படியென்றால் பிதிர்யஜ்ஞங்கள், தெய்வ யஜ்ஞங்கள், முதலானவை தடைப்படுதலால், அந்த யஜ்ஞங்களினால் திருப்திபடையும் தேவதைகளுக்குத் துன்பம் உண்டாகும்.

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு"

என்றார் திருவள்ளுவநாயனாரும். இது முக்கியமாய் தைஜஸாத்மகமான மனோமயகோசத்தில் தேஹபாவனை வைத்தவர்களைத் தஹிக்கும். ஸ்தூலதேஹம் கழிந்த பிதுர்க்களுக்கும் "தாஹதாப உபஸமனார்த்தம் திலோதகம் தர்ப்பயாமி" என்றுசொல்லி எள்ளுந்தண்ணீரும் விடுவதினால் ஸ்தூலமொழிந்த அவர்களுடைய "தாஹதாபம்" மனோமய கோசத்தைச் சேர்ந்ததேயென்று விளங்கும். அன்றி பசியும் தாஹமும் ஸ்தூலத்தைப்பாதித்தாலும் முக்கியமாய் அவை மனோபாதிகளாம். யோகசமாதியி லிருப்பவர் பலநாள் "அன்ன ஆகாரமின்றி"யிருக்கிறார்கள். இப்படியிருப்பது சாத்தியமாவது எப்படியெனில் அது இரகஸியமாம். ஸ்தூலபாவம் ஒழிந்த சிந்தையரை அன்னபானதிக் குறைவு பாதிக்காது. ஏனெனில் "போதுமென்னும்மனமே பொன்செய்யுமருந்து" என்பது அவர்கள் விஷயத்தில் உண்மையான கல்பசித்தியைக்கொடுக்கும். ரஸவாத வித்தையின் நோக்கமெல்லாம் இந்த உண்மையை உள்ளபடி ஸ்தாபித்துக் காட்டி அதில்பூரண நம்பிக்கையுண்டாகச் செய்தலேயாம். ரஸவாத வித்தையில் உள்ளபடி தேர்ந்தோர் "போதுமென்னு மனதை"க்கொண்டே "பொன்செய்யு மருந்து" செய்து வாதவித்தை செய்வார்கள்.

இன்று காலையில் வைத்தியசிகாமணி யொருவருடன் தத்துவார்த்தமாய்ச் சில வார்த்தை

களை விட்டுப்பேச, அவர் "பணமிருந்தால் எல்லாமாகும்" என்றார். "போதுமென்னும் மனது ஒன்றைத்தவிர மற்றதெல்லாம் ஆகும்" என்று சொல்லி யிருந்தாராயின் ஒரு விதத்தில் சரியென்று ஒப்புக் கொண்டிருப்போம். தொட்டதெல்லாம் பொன்மயமாகும் பரிசவேதி பெற்ற அரசன் கதையை நினைத்துக்கொண்டால் "தன்னாலாவது டோன்னாலாகாது" என்று தனக்குத்தானே விளங்கும். தன் என்னும் "தத் சப்தார்த்தம்" ஆத்மாவையே குறிக்கும். ஆத்மா வென்றாலும் அறிவு என்றாலும் ஒன்றே.

போக போக்கியங்களை யெல்லாம் போது மென்னு மட்டும் புசித்து அலுத்துச் சலித்த மனமும் "த்ரிஜகத் சிருஷ்டிஸ்திதி வ்யஸன கர்ம கிருத்" என்ற சுருதி வாக்கியப்படி திரிவிதத் தோற்றமாயுள்ளவற்றின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்யவேண்டி வருந்தும். இப்படி அஹம்பாவ முதிர்ச்சியால் "விசுவாமித்திர சிருஷ்டி"களெல்லாம் செய்யக்கற்ற மனமும் துன்பத்தையே பயக்கும். இந்தத் துன்பத்துக்கு "அத்யாத்மதாபம்" என்று பேர். ஏனெனில் அஹம் பாவமுள்ள வரையில் விருப்பு வெறுப்புக்கள் இருந்துகொண்டே யிருக்கும். விசுவாமித்திரரும் சும்மா விருக்கமாட்டாமல், வசிஷ்டரோடு போட்டி போட்டுக் கொண்டு இந்திர சபையில் பூபாலனும் "அரிச்சந்திரனை யான் பொய் புகலச்செய்வேன்" என்று வீரியம் பேசிவிட்டுப் பூமியில் வந்து,

"வர்ச்சஸ்யேக, மனஸ்யேக, கர்மண்யேக மஹாத்மநாம்" என்னும் மூதுரைப்படி மஹா புருஷனான அந்த அரிச்சந்திர ராசனைப் படாத பாடும் படுத்திக் கெடாதபடி யெல்லாம் கெடுத்துக் கடைசியில் தன் பந்தயம் ஜெயிக்காமல்,—

"மதியிழந்து தன்வாயுமிழந்த மாதவன் மறைந்தான்" என்று வாசித்திருக்கிறோமே!

ஆகையால் எல்லாத் தாபங்களிலும் அத்யாத்மதாபம் மிகவும் கொடியது. ஏனெனில் அது ஸப்த லோகங்களிலும் தன்னைத் தொடர்ந்து வந்து விடாது பாதிக்கும். வெறும் வெளியிலும் அது வித்தாயிருந்து ஒரு நொடிப் பொழுதில் மாமாய் வளர்ந்து "ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடி" ஸப்த லோகங்களையும் ஊடுருவிக்கொண்டு தேஹமாத்யந்தம் ஜல்லி வேர் விட்டுப் படர்ந்து நிற்கும். இது அஹம்பாவம் உள்ளமட்டும் ஜீவனை விடாதுபற்றிப் பாதிக்கும். இதைவென்று வசப்படுத்த வல்லவன் யாரெனில்,—

"அடிதுவக்கி முடியளவு மாறுமா நிலங்கடந்
தப்புறத்தில் வெளிகடந்த ஆதியெங்கள் சோதியை
யுடைபதிக்கண முதருந்தி யுண்மை ஞானவுவகையுள்
உச்சிபட் டிறங்குகின்ற யோகி நல்லயோகியே."

—சிவவாக்கியர்.

இப்படியாக தேஹ தர்மத்தை யறியவேண்டின், ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமான தேஹ, மன, ஸ்வாத்மக தத்துவங்கள் எல்லாவற்றையும் அறியவேண்டி வரும். இதற்கு மந்திர மொன்றே போதுமென்பார் சிலர்; தந்திர மொன்றே போதுமென்பார் வேறு சிலர். பாவனயோக மொன்றே போது மென்பார் இன்னும் சிலர். ஞான மொன்றுண்டானால் போது மென்பார் பின்னும்சிலர். இவையொன்றும் பிரத்யேகமாய்ப் போதாது. 'பணமிருந்தால் எல்லாம் ஆகும்' என்ற உலக ஞானிகள் போல், ஞானமிருந்தால் எல்லாம் சித்திக்கு மென்பார் "தத்துவஞானி" யென்று பேர் சொல்லிக்கொண்டு திரிவார். உண்மையிற் பார்க்கில், யோகமின்றி ஞான மில்லையாம்; அப்படியே, ஞானமின்றி யோகசித்தி யில்லையாம். ஞானம் யோகமிரண்டும் ஒன்றுக்கொன்று ஆதார ஆதேயமா யிருந்து விளங்கும். மந்திர யோகம் "வாக்சித்தி"யை மட்டும் கொடுக்கும். லயயோகம் "தத்த்வ ஞானத்தை" மட்டும் கொடுக்கும். ஹடயோகம் "பிராணயாம ஸித்தி"யைக் கொடுக்கும். பிராணயாம வித்தியினால் "கேவல கும்பகம்" தானே பேற்

படும். இந்தக் கேவல கும்பக ஸித்தியால் நித்திய ஸமாதியும் நிரதிசயானந்தமு மாகிய இராஜயோகம் சித்திக்கும். நிரதிசாயநந்த பூரணமான யோகாநந்தத்தின் ஓழிவில் சகஜானந்த ஞானசித்தி யுண்டாகும். இவனே "ஆத்ம பூரணன்." மற்றவர்களெல்லாம் உபசாரார்த்தமாகவே அப்படிக் கூறப்படுவர்.

"போதுமென்னு மனமே பொன் செய்யு மருந்து" என்று சொன்னேம். இந்த திருப்தி வாய்ந்த மனம் பெற்ற ஸ்வாத்மகமான தற்சொரூபமே "பொன்னம்மாள்". இவள் மூன்றுவது யோக பூமியாம் தனுமானஸியில் பிறந்து, 4, 5, 6-வது பூமியில் வளர்ந்து ஏழாவது பூமியில் பூரணையாவள்.

(i) முதற்பூமியாம் "சுபேக்ஷை"யில் "விவேக வைராக்கியங்களோடு கூடிய சமதமாதி பூர்வகமாகிய தீவிர முமுக்ஷுத்துவம்" சித்திக்கும்.

(ii) சிரவண மனன லக்ஷண முடையதாம் விசாரணை யென்னும் இரண்டாம் பூமியில் பரோக்ஷ ஞானோதயத்துக்கு வேண்டிய சாதனங்கள் ஏற்படும். "ரவி, சீதகிரண, ஸ்மரா" என்ற தேவதைகளின் அனுக்ரஹம் சித்திக்கும். அத்தேவதைகளின் அனுக்ரஹத்தால் ஸ்மிருதி ஞானமுண்டாகி மனம் சூக்ஷ்ம பக்குவ மடையும்.

(iii) இந்த சூக்ஷ்மபக்குவ சித்தியால், அனேகார்த்தங்களைக் கிரகிக்கும் மனம், அவ்வனேகார்த்தங்களை விட்டு சத்தென்னும் (நித்தியமான) ஒரே அர்த்தத்தைக் கிரஹித்து அந்த அர்த்தத்தின் விருத்திப் பிரவாக முடையதாகிறது. இதனால் சூக்ஷ்ம மான மனசு "சத்பாவம்" என்று சொல்லும் சத்தியங்களைக் (Facts of Existence) கிரஹிக்கும் சக்தி வாய்ந்த தாகிறது. இப்படிப்பட்ட கிராஹிய சக்தியுள்ள சூக்ஷ்மமான பக்குவமடைந்த மனசு "சத்பாவ ரூப சத்தியங்களை விடாமல் தைல தாரைபோல் நினைத்து, நிதித்தியாசனம் என்று சொல்லும் அந்த இடையறுத்தியான முதிர்ச்சியில் "தத்-துவம்"="சத்பாவமான" சகுணத் தியானத்தில் நினைத்த "அது"="நீ" என்று நேர் நேராய் தியானத் தியேயாகாரங்களின் ஏகத்துவத்தை தாதாத்மியமாக (அபேதமாய்) உணரும்பொழுது அந்த உணர்வுக்குத் தத்துவஞான மென்று சொல்கிறது. அந்த உணர்வுக் குள்ளிருக்கும் அறிவாம் தன்னை யாய் ந்தறிவது 'தத்துவம்" என்பதின் சப்தார்த்தமாம்.

"மனமாயை மாயை யிம்மாயை மயக்க
மனமாயை தான் மாயுமற்றென்று மில்லை
பினையாய் வதில்லை பிதற்றவும் வேண்டாந்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே."

—திருமந்திரம்.

இப்படித் தத்துவஞானம் பெற்றுத் தத்துவ மாத்திரமாய் எஞ்சிநிற்பது, போக போக்கியங்களும் செய்தொழில் செய்கையும் அற்ற விடத்தே யாகுமாதலால், "போது மென்னும் மனது" "ஜ்யோதிரந்தர்க்கதம் மனஃ" என்னும் சுருதிவாக்கியத்தாற் குறிக்கப்பட்ட ஜோதிர்மனஸாகி "திரிஜகத் சிருஷ்டி ஸ்திதி வியஸன கர்மகிருத்" என்னும் சக்திவாய்ந்ததாயிருப்பதினாலே தன்னிச்சா மாத்திரத்தினாலே திரிலோகங்களையும் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் செய்யும் சக்திவாய்ந்ததாய் தன்னுள் தானே லீலாவினோதமாய் கிரீடித்துக் கொண்டிருக்கும். இந்த அவஸ்தையில் அதற்கு இச்சாமாத்திரத்தினாலே எல்லாம் கிடைத்தனுபவிக்கக் கூடியதாயிருப்பதாலே தன்னில் பூரணமான மனது "போதுமென்னும்" திருப்தி வாய்ந்தாகிறது. இது காரியவுலகில் பொன் எப்படி எல்லாம் வல்லதாயிருக்கிறதோ அப்படி காரணவுலகில் எல்லாம் வல்லதா யிருப்பதினாலே "பொன்" என்கிற அடைமொழியும், பிரகிருதியெல்லாம் வசப்பட்டும் புருஷத்துவம் சித்தியாமையால் ஸ்ரீ சப்தார்த்தமான "அம்மா" என்கிற நாமமும் சேர்த்து "பொன்னம்மா"

என்று இதை சாமான்யமாய்க் குறிப்பிட்டுப் பேசலானோம்:

தொட்டதெல்லாம் பொன்னாகும் பரிசவேதி பெற்றவனுக்கும் ஒரு தீராக் குறையேற்பட்டது போல், நினைத்ததை யெல்லாம் முடிக்கும் ஆற்றல் மிகுந்த ஜோதிர் மனசைத் தேஹமாக (உபாதியாக) வுடைய இந்த ஜீவகாரண ஸ்வரூபியாகிய "பொன்னம்மா"ளுக்கும் ஒரு குறையுண்டு. அக்குறை யென்ன வென்றால், நினைத்தது முடிக்கு மாற்றலிருந்தும் நினைவொழிந்திருத்தல் சித்திக்காத குறையேயாம். அதற்கு அந்த ஜோதிர்மனமாகிய உபாதி நீங்கினால் தான் அக்குறை தீரும்.

அந்த உபாதி நீங்கினால் அந்தர்யாமியாய் அசைவற்றிருக்கும் விஷ்ணுமயமான பரமபதம் கிடைக்கும். இதற்கு,—

"தன்மனோவிலயம் யாதி தத்விஷ்ணோ பரமம் பதம்" என்ற சுருதி வாக்கியமே ஆதாரமாயிருக்கிறது.

ஆகையால் நினைத்ததெல்லாம் நினைத்தமாத்திரத்தாலே முடிக்கவல்ல "பொன்னம்மா"ளுக்கும் அவளுடைய உபாதி நீக்கத்தாலேயே பரப்பதம் சித்திக்கும்.

"பொன்னம்மாள்" செத்தால், அவள் "கண்ணம்மாள்" ஆவள். அதாவது யோகாநந்தமும் அற்றவிடத்தே ஞானாநந்தம் சித்திக்கும். "அறிவழிந்த சுகமதனை யறிந்துசொல்வ தெப்படிச் சொல்!" என்பது ஆனந்தத்தாய்மொழி. ஆகவே, சோதிடவல்லோர் சூரியனும் சந்திரனும் "எதிர்த்து நிற்கச் சூதகம் விளைக்கும் சம்பவம் ஒன்று கட்டாயம் நேரிடும்" என்றது மெய்ப்பாக வேண்டி மிகப்பரிந்து உள்ளபடிக்கே யான் உள்ளன்பு வைத்ததனால் "நெற்றிக்கண் கண்டுஉவந்தநேரிழையாம் பொன்னம்மாள்" கடகரவி சுத்தமதில் கன்னியாமதி சஷ்டி திதி, சித்திரையுடன் ஸ்வாதிசேர் சிரேஷ்டமாங் குருவாரத்தில் ஷாட்குண்ய பூரணையாம் ஷோடசி பதம் பற்றிக் கஷ்டமெல்லாம் நீங்கவே, செத்து நீறாகியவள் சிவபுரந்தான் சேரப், "பற்று" நீறாகவே பதைபதைத்து மனமுடைந்து, உற்றதொரு மார்க்கமதை † நாறுந்தள்ளி யொன்றாக "உச்சிபட்டிறங்குகின்ற" உத்தமமாம் ஊர்த்துவமாக மார்க்கமென் றுணர்ந்திருந்தேன். இதுவே பக்திமார்க்கம்: பதிவிரதா சிகாமணிகள் பரிந்துசெல்லும் மார்க்கமிது! அதன் விவரம் எப்படியென்றால்:—

"கற்பனையற்றுக் கனல்வழியே சென்று"— சங்கல்பவிகற்ப ரூபவிகாரங்களற்று குண்டலினி சக்திபோனவழியே சென்று, (தற்பரமான யோகஸப்யமத்தில்) "சிற்பனையெல்லாம் சிருஷ்டித்தபேரொளி"—ஸ்ரீங்காரமான திரிஜகத்ரூபமான எல்லாவற்றையும் சிருஷ்டித்த பேரொளி பொருந்திய (ஜோதிர்–மனஸ்ரூப) பொன்னம்மாள், "பொற்பினைநாடிப் புணர்மதியோடுற்று" —(ஜோதிர் மனஸாகிய தன்னழகிலும் பெரிதான "ஸ்ரீயரு" வாம் (காமகலாதீதப்) பேரழகு நாடி, சூரியனைப் புணர்ந்து "அமாவாசை பூரணையாகும்" (ஷோடசகலையுள்ள மதியோடுற்று,—"சூரியனைப் புணர்ந்து பூரணையான மதியோடுற்ற" தானே பரமாகப் பொருந்தும் கருணாமிருதம்பொழியும் சமாதியே பக்திமார்க்கத்தின் முடிவாம். இதுவே கமலாம்பாள் அடைந்த பேறு.

இவ்விதப் பக்தியினாலேயே சிவவாக்கியர் பத்தி கொங்கண சித்தரைப்பார்த்து தன்னைக் "கொக்கென் றெண்ணினையோ கொங்கணவா" என்று கேட்டனள். வாசுகிதேவியாரும் இந்தப் பக்தியினாலேயே கல்லையமுதாக்கிப் படைத்துத் தன் கற்பை ஸ்தாபித்துத் திருவள்ளுவருக்கும் பத்னியாகும் பாக்கியம்பெற்றாள். அநசூயாதேவியும் இவ்விதப் பக்தியினாலேயே இரு

† சுருதியில் சொல்லிய நூறுநாடிகளும் தள்ளி உச்சியிலுள்ள ஸஹஸ்ரகமலம் நுழைந்து செல்லும் ஒரு உத்தமநாடி.

ம்புக்கடலையைச் சுண்டிக்கொடுத்து நாரதர் கலகத்தால் தன்னைப் பரிசோதிக்கவந்த திரிமூர்த்திகளையும் குழந்தைகளாக்கி நிர்வாண பிக்ஷையளித்துப் பின்னர் தம் பர்த்தாவாகிய அத்திரிரிஷியவர்களின் பரங்கருணை விசேஷத்தால் அவர்களைத் தம் திருவயிற்றிற்றாங்கி யெம்பெருமானும் பரமகுருவுமாகிய தத்தாத்திரேய மூர்த்தியைப் பெற்றெடுத்து உலகுய்யக் கொடுத்தாள். இதுவே பதிவிரதம். இதன் மஹிமையறிந்தே திருவள்ளுவரும்,—

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதொழுவாள்,
பெய்யெனப் பெய்யு மழை"

என்று திருவாய் மலர்ந்தருளலாயினர். "சீத்தலைச் சாத்தனாரும்" இதை யெடுத்தாண்டு,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்."

என்று "மணிமேகலை; சிறைசெய்காதையில்' கூறியது இப்பதிவிரத மஹிமையின் உண்மையுணர்ந்தேயல்லவா! ஆகையால் மந்திர தந்திரங்களினும் பதிவிரதமே மேலானது. அதுவே பக்தி மார்க்கமுமாம். இப்பக்திமார்க்கத்தை விளக்குவது கமலாம்பாள் சரித்திரம்.

"மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே!
மந்திரங்கள் கற்றநீர் மறித்தபோது செல்விரோ!
மந்திரங்க ளும்முளே மதித்தநீரு மும்முளே
மந்திரங்களாவது மனத்தினைந்தெழுத்துமே."

ஓம் தத்ஸத். —சிவவாக்கியர்.

---



## Kannaki—A Social Drama.

### கண்ணகி.

அங்கம். IV] [காட்சி. 2

இடம்—இடைச்சி மாதரியின் வீடு.

காலம்—நண்பகல்.

பாத்திரர்—{ கண்ணகி. கோவலன். மாதரி. ஐயை.

மாதரி:—(கண்ணகி, கோவலன் சகிதம் தன் வீட்டுக்குள் நுழைந்து தன் மகள் ஐயை என்பவளைக் கூப்பிட்டு) குழந்தாய்! நம்முடைய வீட்டிற்கு விருந்தினராக இருவரை அழைத்து வந்திருக்கிறேன்! நீ தனியாக இருக்கின்றாயே; உன்னோடு சேர்ந்திருந்து விளையாட யோக்கியதை யுடையவர்கள் இருந்தால் நலமாயிருக்குமே; என்று நினைத்து உனக்கு ஒரு சகோதரியையும், சகோதரனையும், கொண்டு வந்திருக்கிறேன்! இதோ அவர்கள் வந்திருக்கிறார்கள் பார்! (என்று சொல்லி கோவலன், கண்ணகி இருவரையுங் காட்டுகிறாள்.)

ஐயை:—(புன்சிரிப்புடன்) அம்மா! அப்படியா! மிகவும் சந்தோஷம்! இனி எனக்குக் கவலை யென்பதே இராது! (கோவலனை நோக்கி) அண்ணா! வரவேண்டும்! என் நிற்கிறீர்கள்? உட்காருங்கள்! (ஒரு பாயை எடுத்துக் கூடத்தில் விரிக்கிறாள்.)

கோவலன்:—குழந்தாய்! உன் விருப்பப்படியே உட்காருகிறேன்! (பாயில் உட்காருகிறான்.)

மாதரி:—(கண்ணகியை நோக்கி) நீ எனம்மா நிற்கிறாய்! நீயும் உட்காரு!

கண்ணகி:—(நாணத்தினால் தலைகவிழ்ந்து புன்சிரிப்போடு) இருக்கட்டும்; பாதகமில்லை!

ஐயை:—(மாதரியை நோக்கி) நீ என்ன அம்மா! ஒன்றுந்தெரியாத கர்னாடகப்பிடுங்கலாயிருக்கின்றாய்! புருஷனிருக்கும்போது அவருக்கெதிரில் சரிசமானமாய் மனைவி உட்காரலாமா? அதுவும் நீயும் நானும் எதிரிலிருக்கும்போது உட்கார்ந்தால் "ஆ! இவளுக்கென்ன! நாணமென்பது கொஞ்சமும் இல்லை! புருஷனை அலட்சியஞ்செய்து அவனுக்கெதிரில் உட்கார்ந்து கொண்டாள்!" என்று நாம் சொல்லமாட்

டோமா? சொல்லாவிட்டாலும் நினைக்கமாட்டோமா? அதை உத்தேசித்துத் தான் கண்ணகி உட்காருவதற்குக் கூச்சப்படுகிறாள்! (என்று சொல்லி விட்டுப் புன்சிரிப்போடு கண்ணகியைப் பார்த்தாள்.)

கண்ணகி:—(ஐயை நோக்கி) தங்காய்! நீ சொல்லுவது வாஸ்தவமே யாயினும் என் விஷயத்திலும், என் கணவனுடைய விஷயத்திலும் அது வாஸ்தவமாக மாட்டாது! ஏனெனில்—!

கோவலன்:—ஏனெனில் என்னைப்போன்ற புருஷனை மனைவி அலட்சியஞ் செய்வதினால் பாதகமில்லை போலும்! அப்படித் தானே?

கண்ணகி:—(புன்சிரிப்போடு கோவலனைப் பார்த்து) உங்களுக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படியே வைத்துக் கொள்ளுங்கள்.

மாதரி:—(கண்ணகியை நோக்கி) குழந்தாய்! அவர் சொல்வதைக் கவனியாதே! நீ உன்னுடைய காரணத்தைச் சொல்லு! "ஏனெனில்—!

கண்ணகி:—(புன்சிரிப்போடு) அவர் சொல்லுவதைக் கேட்காமல் வேறு யார் சொல்லுவதை நான் கேட்பது! ஏனெனில்—! நான்சொல்ல ஆரம்பித்தால் அவர் (கோவலனைச்சுட்டி) என்னை அதிகப்பிரசங்கி என்பார்!

கோவலன்:—(சிரித்துக்கொண்டு) இப்போது சொன்னதே அதிகப் பிரசங்கம் என்பதை விளக்கும்போது "அதிகப் பிரசங்கி" என்று உன்னை நான் சொல்லி அந்த உண்மையை விளக்கவேண்டிய அவசியமில்லையே! ஆதலால் நீ உன்னுடைய காரணத்தை தாராளமாய்ச் சொல்லலாம்! மேலும் நீ அதிகப் பிரசங்கம் எவ்வளவு செய்தபோதிலும் அது எனக்குச் சிறிய் பிரசங்கமாகவே எப்போதும் தோன்றுகிறது! நாள் முழுவதும் நீ பேசிக் கொண்டிருந்த போதிலும் இவ்வளவு சொற்ப நேரத்துக்குள் பேச்சை நிறுத்தி விட்டாயே என்று எனக்கு வருத்தமேற்படுகிறதே தவிர இவ்வளவு நெடுநேரம் பேசுகின்றாயே என்று சலிப்புண்டாகிறதில்லை! என்ன பொடிவைத்துக் கொண்டு நீ மயக்குகின்றாயோ தெரியவில்லை!

கண்ணகி:—எனது கணவனுடைய பாத தூளிப் பொடியைத் தவிர வேறு பொடி என்னிடத்தில்லை!

மாதரி:—அம்மா; கண்ணகி! அதிருக்கட்டும்! "ஏனெனில்—என்றதைச் சொல்லிமுடி!

கண்ணகி:—(மாதரியை நோக்கி) ஏனெனில், அம்மணீ! "புருஷனைவிட மனைவி தாழ்ந்தவள்; மனைவியைவிடப் புருஷன் உயர்ந்தவன்" என்னும் கொள்கை பொதுவாக நம்மவர்களுக்குள் ஏற்பட்டிருந்த போதிலும், எனக்கு மட்டும் அந்தக்கொள்கை சரியான கொள்கை யென்று தோன்றவில்லை! ஒத்த அன்பும், ஒத்த குணமும், ஒத்த எண்ணமும் உடையவர்களாய் இருந்து ஸ்திரீ புருஷர்கள் இல்லற தருமத்தை நடத்த வேண்டுமென்பது சாஸ்திர யுக்தமான விதியல்லவா? அப்படி இல்லற தருமத்தை நடத்துவதற்கு ஒருவரையொருவர் ஏற்றத்தாழ்வாய்க் கருதாமல், சரிசமானமாக நினைத்து இருவரும் ஒத்த அன்பு பூண்டு ஒழுக வேண்டியது நியாயமாயும் இன்றியமையாததாயு மிருக்கிறதென்பது உங்களுக்குப் புலப்படவில்லையா? அப்படியிருக்க, ஒரு ஸ்திரீ, தன்னைவிடப் புருஷன் உயர்ந்தவன் என்றாவது; ஒரு புருஷன் தன்னைவிட ஸ்திரீ தாழ்ந்தவளென்றாவது; கருதினால் ஒத்த அன்பும் விசுவாசமும் உண்மையாய் ஏற்படுமோ? ஒருபோதும் ஏற்படவே மாட்டாது! "ஆணாய்ப் பிறந்திருக்கும் அந்த ஒரு காரணத்தைக் கொண்டே புருஷன் தன்னைவிட உயர்ந்தவன் என்று ஒரு ஸ்திரீ நினைப்பாளே யானால் அந்த எண்ணமே அந்தப் புருஷனை உண்மைக்காதலின் பொருட்டு நேசிக்கும்படியாக அவளைச் செய்யாமல் அவனைத் தான் உயர்ந்தவனாக நினைத்திருப்பது காரணமாகவும், அவனுடைய இயல்பு காரணமாகவும், அவனுடைய பொருள் காரணமாகவும், அவனை நேசிக்கும்படியாக அவளைச் செய்துவிடுகிறது! ஒருவனுடைய உயர்வையும், இயல்பையும், பொருளையும் காரணமாகக்கொண்டு ஒரு ஸ்திரீ அவனைக் காதலிப்பாளே யானால் அந்தக்காதல் அவைகளைப் பற்றிய காதலாகுமேயன்றி அவனைப் பற்றிய காதலாகாது! ஆகவே அவளுடைய காதலும் அன்பும் கட்டாயத்தினால் ஏற்படும் காதலாகவும் அன்பாகவும் ஆகுமே யொழிய உண்மைக்காதலாகவும் அன்பாகவும் ஆகமாட்டாது! காதலின் பொருட்டே ஏற்படும் உண்மைக் காதலுக்கும், புறப்பொருளைப்பற்றி நிகழும் பொய்மைக் காதலுக்கும் உள்ள வித்தியாஸம், பகலுக்கும் இருளுக்குமுள்ள வித்தியாஸம் போலாகும் என்பதை நான் உங்களுக்குச் சொல்லவும் வேண்டுமோ? அப்படிப்பட்ட பொய்மைக் காதலுக்கு ஸ்திரீகள் தங்களை அடிமையாக்கிக் கொள்ளுவதைவிட, காதல் இல்லாமலே இருந்துவிடுவது எத்தனையோ மடங்கு

சிறந்ததும், நன்மை யுடையது மாகும்! எப்பொழுது ஒரு ஸ்திரீ தன்னுடைய புருஷனைத் தனக்குச் சமான மானவனென்று கொள்ளாமல் புருஷனைப் பிறந்துவிட்டதால் தன்னிலும் மேலானவன் என்று கருதுகிருளோ அப்பொழுதே அவளுக்கு அந்தப் புருஷனிடத்தில் உண்மைக்காதல் கொள்ளும் பாக்கியம் போய், அவனுடைய உயர்வுக்காகக் காதலிக்கும் கட்டாயம் வந்து ஏற்பட்டு விடுகிறது ! என்னுடைய கோவலனை எனக்கு எல்லாவிதத்திலும் சமமுடையவரென்று நான் கருதிவந்த படியால் அவரை அவர் பொருட்டே நேசிக்கும் பாக்கியமும், காதலிக்கும் புண்ணியமும் எனக்கு ஏற்பட்டது ! என்னுடைய கணவனை உண்மைக் காதலுடன் நேசிக்கும்படியான பாக்கியம் கிடைத்ததே; அந்த ஒரு பாக்கியமே எனக்குப்போதுமானது ! உலகத்தோரை திருப்தி செய்வதற்கும், உற்ருர் உறவினருடைய நன்குமதிப்பைப் பெறுவதற்கும் என்னுடைய கணவனிடத்தில் வெளிப்பகட்டாய் நடந்து கொள்ளுவதற்கு நான் சிறிதும் சம்மதியேன்! எனது கணவனுடைய உண்மைக் காதல் எனக்குப் பெரிதேயொழிய அவர்களுடைய திருப்தியும் நன்குமதிப்பும் பெரிதல்ல! அம்மணி! ஒரு புருஷன் தன்னுடைய மனைவியைத் தனக்குச் சமானமாகக் கருதாமல் தாழ்ந்தவளாகக் கருதுவானேயாளுல் அவளிடத்தில் உண்மையன்பு அவனுக்கு ஏற்படமாட்டாது ! தான் அவளைவிட உயர்ந்தவனென்றும், அவள் தன்னிலும் தாழ்ந்தவளாக இருப்பதால் தன்னைக் காதலிக்க அவள் கடமைப் பட்டிருக்கிருள் என்றும், தான் உயர்ந்தவனுக இருப்பதால் அவளைத் தான் எவ்வளவு கொடுமையாக வேண்டுமானுலும் நடத்தலாமென்றும் நினைத்து தன்னுடைய உயர்வைப் பற்றித் தானே மனேபாவனை செய்து இறுமாந்திருப்பான் ! இப்படி அவன் நினைத்தானேயானுல் மனைவியினிடத்தில் அவனுக்கு உண்மைக்காதல் தினைத்துணையாவது ஏற்படுமா? ஏற்படவே மாட்டாது ! எப்போது அவனுக்கு அவளிடத்தில் உண்மைக்காதல் ஏற்படவில்லையோ அவளுக்கும் அவனிடத்தில் உண்மைக்காதல் ஏற்படாமல் போவது சகஜந்தானே ? அன்பு அன்புள்ள விடத்தை நாடுமே ஒழிய அது இல்லாத இடத்தை நாடுமோ? நாடாது! ஸ்திரீ புருஷர்கள் ஒருவரை யொருவர் ஏற்றத் தாழ்வாய் நினைத்து தங்களிருவருக்குள்ளும் பரஸ்பரம் ஏற்படவேண்டிய பரிசுத்தமான அன்புரிமையை இழந்து "கேவலம் விவாகம் என்னும் பந்தத்துக்கு உட்பட்டு விட்டோமே; ஆதலால் எப்படியாவது உலக வாழ்க்கையைக் கழித்துத் தொலைக்க வேண்டுமே", என்று நினைத்து வேண்டா வெறுப்பாய் சண்டை சச்சரவுடனும், துக்க துன்பங்களுடனும், மனேவமைதியும் சந்துஷ்டியு மில்லாமல் இல்லறமென்னும் நல்லறத்தை ஒழுங்காய் நடத்த வகையற்று, பூமிக்குப் பாரமாயும் சோற்றுக்குக்கேடாயும் இருந்து நடைப்பிணங்களைப்போல் அலைந்து திரிவது சிறந்ததா ? அல்லது தன்னைப் போலவே ஸ்திரீயை நினைக்கும் ஒரு புருஷனுக்கும், தன்னைப்போலவே புருஷனை நினைக்கும் ஒருஸ்திரீக்கும், பரஸ்பரம் உண்மையாய் ஏற்படும் அன்புரிமையை ஒன்றுபடுத்துவதற்குச் சாதகமாய் ஏற்பட்டிருக்கும் "விவாகம்" என்னும் சிறந்த முறையை பந்தமென்று நினைக்காமல் அதைத் தெய்வீக சம்பந்தமான ஒரு உபகாரசக்தி என்று கருதி, தம்பதிகள் அன்புடன் அதை ஏற்று இருவரும் ஒன்றுபட்டு ஒத்த அன்பும் குணமும் உடையவர்களாய் இல்லறதருமத்தை முறையாயும் ஒழுங்காயும் மனமுவந்து நடத்தி இம்மண்ணுலகத்தில் அனுபவிக்கக் கூடிய சிறந்த சுகத்தை யனுபவித்து இம்மையிற் புகழையுங் கீர்த்தியையும் நிலைநாட்டுவதோடு, மறுமைக்குரிய விதையையும் இல்லறத்திலிருந்தபடியே விதைத்தல் சிறந்ததா? நீங்களே சொல்லுங்கள் ! ஆதலால், அம்மணி! நான் பெண்ணுய்ப் பிறந்திருக்கும் அந்த ஒரு காரணங்கொண்டே என் ஆருயிர்க் காதலராகிய கோவலன், மற்றப் புருஷர்களில் பெரும் பாலார் தங்கள் மனைவிகளைக் கேவலமாய் நினைத்து அடிமையிலும் கேடுகெட்ட அடிமையென மதித்துத் தாழ்வாயும் அலட்சியமாயும் நடத்துகிறதைப்போல், என்னை நடத்தாமல் தனக்குச் சமான முடையவள் என்றே என்னை மதித்து உண்மைக் காதலுடனும் சிறந்த அன்புடனும் நேசித்து வருகின்ருரே ; அது ஒன்றே என்னுடைய ஜென்மம் சாபல்ய மடைவதற்குப் போதுமானது ! அம்மையே! உண்மையன்புடைய காதலனேடு உண்மையன்போடு கலந்து வாழும் பெரும்பாக்கியத்தை விட கற்புடைய பெண்களுக்குச் சிறந்த பாக்கியம் வேறு என்ன விருக்கிறது ? இந்தப் பாக்கியத்தை விட இன்பம் பயக்கும் பாக்கியம் வேறில்லை என்பதற்கு, ஸ்ரீமாணிக்க வாசகப் பெருமானுடைய திருவாசகத்தை நினைக்கும்போது தமக்குண்டாகும் இன்பம், உண்மைக் காதலனுடைய கலவியைக் கருதுகின்ற கற்புடையாளின் இன்பத்தைப்போல் இருக்

கிறதென்னும் பொருள்பட ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்,

"சேம மிருந்திருவாத வூர்த்தே வென்றுலகு புகழ்
மாமணியே நீயுரைத்த வாசகத்தை யெண்ணுந்தோறுங்
காமமிகு காதலன்றன் கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாளின் பினுமின் பெய்துவதே"

என்று அருளிச்செய்திருப்பதே போதுமான அத்தாட்சியல்லவா? ஒத்த அன்போடு காதலனும் காதலியும் இல்லற தருமத்தை நடத்திவந்தால் அவர்களுக்கும் தெய்வத்துக்கும் வித்தியாச மில்லை யென்பது, "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்" என்னும் ஆன்றோர் வாக்கால் வலியுறுத்தப்படவில்லையா? இல்லற தருமம் நடத்தப்படவேண்டிய முறையும், ஸ்திரீ புருஷர்கள் ஒருவரோடொருவர் அன்பு பூண்டு ஒழுக வேண்டிய நெறியும் இவ்விதம் இருக்க, இந்த உண்மையை உணராமல் "பெண்கள் தங்களைவிடத் தாழ்ந்தவர்கள்' என்று புருஷர்கள் நினைப்பது எவ்வளவு அறியாமை! அப்படிப் புருஷர்கள் நினைப்பதற்கு நியாயமான காரணம் ஏதாவது இருக்கிறதா? இல்லையே. கடவுளுடைய சிருஷ்டியில் உயர்ந்தவரார்; தாழ்ந்தவரார்? புருஷர்களும் ஸ்திரீகளைப்போலவே வறுமையினால் வருந்தவில்லையா? நோயினால் பீடிக்கப்படவில்லையா? பசியினால் துன்பப்படவில்லையா? இறக்கவில்லையா? பிறக்கவில்லையா? ஸ்திரீகளைப்போலவே வினைப்பயனால் உடம்பெடுத்துப் பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தில் அகப்பட்டுச் சுழலும் புருஷர்கள் தங்களைமட்டும் உயர்ந்தவர்களென்று கருத என்ன நியாயமிருக்கிறது? புருஷர்களுடைய சரீரமும் ஸ்திரீகளுடைய சரீரத்தைப்போலவே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் அமைக்கப்பட்டுக் கடைசியில்,

"எரியெனக்கென்னும் புழுவோவெனக்கென்னு மிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும் பருந்தோவெனக்கென்னுந் தான்புசிக்க
நரியெனக்கென்னும் புன்னாயெனக்கென்னு மிந்நாறுடலைப்
பிரியமுடன் வளர்த்தேன் இதனாலென்ன பேறெனக்கே."

என்ற ஆன்றோர் திருவாக்குக்கு இணங்க நெருப்புக்கும் புழுவுக்கும், நரிக்கும் நாய்க்கும் இரையாகும் அசுத்தமான மண்கூடுதானே? மெய், வாய், கண், மூக்குச், செவி என்னும் பஞ்சேந்திரியங்களும், மனம், புத்தி, சித்தம் அகங்காரமென்னும் நான்கு அந்தக்கரணங்களும், புருஷர்களுக்கு ஏற்பட்டிருப்பது போலவே ஸ்திரீகளுக்கும் ஏற்பட்டிருக்கும்போது புருஷர்கள் தங்களைமட்டும் உயர்த்திக் கூறிக்கொள்ளக் காரணமில்லையே? புருஷர்களைப்போலவே ஸ்திரீகளுக்கும் பகுத்தறிவு இருக்கிறதன்றோ? புருஷர்கள் தங்கள் மூளையின் பலங்கொண்டு அறிவு விருத்தியிலும், கல்விப்பயிற்சியிலும், உழைத்து வருவதைப்போலவே ஸ்திரீகளும் உழைப்பதற்குத் தகுந்த மூளையும் அறிவும் அவர்களுக்கு மிருக்கின்றன என்பதை யாராவது மறுக்கத் துணிவார்களா? "ஸ்திரீகள் புருஷர்களுக்குச் சமானமானவர்களல்ல; தாழ்ந்தவர்கள்தான்: என்பது தெய்வ சம்மதமல்ல! கடவுளுடைய அபிப்பிராயம் அவ்விதமிருந்தால் அவர் மனிதனுக்குத் துணையாக ஸ்திரீகளை ஏற்படுத்த வேண்டியதில்லையே? சாதாரணமான ஆடுமாடுகளையே மனிதனுக்கு நற்றுணையாக ஏற்படுத்தியிருக்கலாமன்றோ? எல்லாம் வல்ல கடவுள் அவ்விதம் செய்யாமல் தாழ்மையான மிருகாசிகளை யெல்லாம் ஒழித்து, ஆறறிவோடு கூடிய ஸ்திரீகளையே ஆறறிவுடைய புருஷர்களுக்குத் துணையாக ஏற்படுத்தியிருப்பதை ஒருவன் சிறிதூன்றி ஆலோசிப்பானேயானால் புருஷர்களுக்குச் சமமானவர்கள் ஸ்திரீகள் என்பதே உண்மை; அதுவே தெய்வ சம்மதம்; அதுவே இயற்கைவிதி; அதுவே அறிவுடையாரின் கொள்கை; அதுவே சான்றோரின் கருத்து; அதுவே உலக தர்மம்; அதுவே உண்மை நாகரிகத்தின்பலன்; என்பதை அறிந்து கொள்ளாமற் போகான்! ஆண்புறா பெண்புறாவுக்கு மிகுந்த அன்புடன் தீனியைத் தன் மூக்கினால் கொத்தி ஊட்டுவதையும், பெண்புறா தன்மூக்கினால் ஆகாரத்தையெடுத்து ஆண்புறாவுக்குக் கொடுப்பதையும், இரண்டும் மூக்கொடு மூக்கு பொருந்தும்படி முத்தமிட்டு மகிழ்வதையும் கவனிக்கும்போது கேவலம் பட்சிஜாதிகள்கூட ஆண் பெண் என்னும் பாகுபாடுகுறித்து ஏற்றத்தாழ்வு பாராட்டாமல் ஒத்த அன்பும் சமத்துவமும் கொண்டு ஒன்றையொன்று நேசிக்கின்றன என்பது புலப்படவில்லையா? தன்னுடைய பேடையைச் சௌரவமாகக் கூட்டி விருக்குப்படிச் செய்துவிட்டு தான் வெளியே சென்று இரைதேடிக் கொண்டுவந்து முதலில் தன்னுடைய பேடைக்கு இரைகொடுத்துவிட்டுப் பின்பு தான் இரைகொள்ளுகிற தூக்கணாங் குருவியின் அரியசெயலை ஒருவன் கவனிப்பானேயானால் அந்தப்

பறவை தன்னுடைய பேடையை எவ்வளவு கௌரவத்துடனும் மதிப்புடனும் நடத்துகிற தென்பதை அறிந்து கொள்ளுவான்! கேவலம் மிருகங்களுக்குள்ளும் பட்சிகளுக்குள்ளும் இவ்விதமான சமத்துவம் ஏற்பட்டிருந்தால் ஆறறிவோடு கூடிய புருஷர்களும் ஸ்திரீகளும் எவ்வளவு சமத்துவமான நோக்கத்தை ஒருவர்மீதொருவர் கொள்ளவேண்டும்? ஆகவே "புருஷர்களை விட ஸ்திரீகள் தாழ்ந்தவர்கள்" என்னும் கொள்கை யுக்திக்கும் அனுபவத்துக்கும் பொருந்தாத போலிக்கொள்கையா யிருப்பதால் அந்தக்கொள்கையில் எனக்கு உடன்பாடு சிறிதும் கிடையாது! இதனல் ஸ்திரீகள் புருஷர்களைக் கேவலமாயும் தாழ்மையாயும் கருதவேண்டுமென்று நான் சொல்லுவதாக நினைத்துவிடக்கூடாது! ஏற்றத்தாழ்வு, அறிவு ஒழுக்கம் முதலியவைகளைப் பொறுத்ததே தவிர ஸ்திரீ புருஷ பாகுபாட்டைப் பொறுத்ததல்ல என்பதே! ஆதலால் புருஷன் உட்கார்ந்திருக்கும்போது அவருக்கு எதிரில் சரிசமானமாக உட்காரலாகாது என்று நினைத்து நான் நிற்பதாக உங்களுடைய புத்திரி ஐயை சொன்னளல்லவா? அது பொருந்தாது! நான் அவ்விதம் நினைக்க வில்லை! நான் உட்காராததற்குக் காரண மதுவல்ல!

கோவலன்:—(புன்சிரிப்போடு) உஸ்! அப்பாடா! மழை பேய்ந்து ஓய்ந்தது! அடாடா! கண்ணகிக்கு மிகுந்த சிரமம்! இன்றைக்கு அவளுக்கு இரண்டுசேர் நெய்கொடுத்தாலும் தகும்! அதிக—!(தன் பக்கத்தில் கிடந்த விசிறியை எடுத்துக் கண்ணகிக்கு விசுறுகிருன்.)

கண்ணகி:—(கோவலன் கையிலிருந்த விசிறியை வாங்கித் தானே விசிறிக்கொண்டு, புன் சிரிப்போடு அவனை நோக்கி) அதிக—! அப்புறமென்ன? பிரசங்கமோ? (என்று கேட்கிருள்)

கோவலன்:—நான் அப்படிச் சொன்னேனு? அரிய—பெரிய—சிறந்த—ஆழ்ந்த—உயர்ந்த—பிரசங்கம்!

மாதரி:—(தன்மகள் ஐயைநோக்கி) அம்மா! கண்ணகி நெடுநேரம் பேசிக் களைத்துப் போயிருக்கிருள்! எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து அநேகநாளிருக்கும்போல் தெரிகிறது! ஆதலால் நீ சென்று பெரிய தவலையில் அவள் ஸ்நானம் செய்வதற்காக வெந்நீர்போடு! மஞ்சள், சீயக்காய், முதலியவைகளை அரைத்துத் தயாராக ஸ்நான அறைக்குள் கொண்டுபோய் வை! சந்தனுதித்தைலத்தை தேய்த்துக் கொள்ளுவதற்காக வாயகன்ற கிண்ணத்தில் ஊற்றி எடுத்துவா! சமையற்கு வேண்டிய காய்கறி பதார்த்தங்களை யாரையாவது கடைக்கு அனுப்பி வாங்கிவரச் சொல்லு! எழுந்து சீக்கிரம் செல்லு!

ஐயை:—அம்மா! அப்படியே ஆகட்டும்! (அவ்விடத்தை விட்டு நீங்குகிருர்கள்.)

கண்ணகி:—(மாதரியை நோக்கி) அம்மா! நாங்கள் உங்களுக்கு மிகுந்த சிரமத்தைக் கொடுக்கிறேம்!

மாதரி:—கண்மணி! சிரமம் ஒன்றுமில்லை! ஏதோ எங்கள் கையில் கிடைத்ததைக்கொண்டு நாங்கள் செய்கிறேம்! சற்று ஏறத்தாழ இருந்தாலும் அதைப் பாராட்டாமல் அன்புடன் அங்கீகரிக்க வேண்டும்! நீ எழுந்து தைலமாடுவதற்குச்செல்லு! உன்னுடைய நாதரையும ஸ்நானம் செய்யும்படிச் சொல்லு! ஐயை புதுப்பானை, அரிசி, நெய், பருப்பு, காய்கறி பதார்த்தங்கள் முதலியவைகளைக் கொண்டுவந்து கொடுப்பாள்! நீ சமையல் செய்து உன் கணவனுக்குப் படைத்து நீயும் போஜனம்செய்! இன்று நெய் முறையாதலால் நான் இரண்டொரு வீடுகளுக்கு நெய் கொண்டு போக வேண்டும்! ஆதலால் நான் வெளியேபோய் வருகிறேன்! எதாவது வேண்டுமானல் குழந்தை ஐயையைக் கேட்டு வாங்கிக்கொள்! வெளியே போவதற்கு எனக்கு உத்தரவுகொடு!

கண்ணகி:—அம்மா! "காலத்தினற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப்பெரிது" என்பதை நான் அறியாதவளல்ல! தங்களுடைய அன்புக்கும் ஆதரவுக்கும் நாங்கள் இருவரும் மிகவும் கடமைப்பட்டவர்களாயிருக்கிறேம்! நீங்கள் வெளியே சென்று வரலாம்! நான் தைல மாடுவதற்குச் செல்லுகிறேன்! (கோவலனை நோக்கி) பிராணபதி! தாங்களும் எழுந்து நீராடச் செல்லுங்கள்! (மூவரும் கூடத்தை விட்டு நீங்குகிருர்கள்).

ஐயை:—(கடைக்குச்சென்ற இடைக்குலப்பெண்கள் திரும்பி வந்தவுடன் அவர்களை நோக்கி) இங்கேயே இருங்கள்! கண்ணகி யம்மா ஸ்நானம் செய்துவிட்டார்களா என்று பார்த்து வருகிறேன்! (வீட்டுக்குள் சென்று மறுபடியும் திரும்பிவந்து) அதோ வருகிருர்கள்! சற்றுநேரம் இருங்கள்! (கண்ணகி ஸ்நானம் செய்துவிட்டு வந்து விடுகிருள்.)

பெண்கள்:—இதோ வந்து விட்டார்கள்! இதோ வந்து விட்டார்கள்!

ஐயை:—உஸ்! பேசாமலிருங்கள்! (என்று அந்தப் பெண்களை அடக்கிவிட்டுக் கண்ணகி வந்ததும் அவளை நோக்கி) அம்மா! சமையலுக்கு வேண்டிய பாத்திரங்களும், காய்கறி பதார்த்த வகைகளும் இதோ இருக்கின்றன!

"* கோளிப்பாகற் கொழுங்கனித் திரள்காய்
† வாள்வரிக் கொடுங்காய் மாதுளம் பசுங்காய்
மாவின் கனியொடு வாழைத் தீங்கனி
சாலி யரிசி தம்பாற் பயனொடு
கோல்வளை மாதே கொள்க" நீ!

அம்மா! இவைகளை எடுத்துக் கொள்ளுங்கள்!

கோவலன்:—(கண்ணகி சமையல் செய்வதை ஒளிந்திருந்து பார்த்துத் தனக்குள் சொல்லிக் கொள்ளுகிறான்.) ஆஹா! இந்த வெள்ளரிக்காய்களையும், மாங்காய்களையும் அரிவாளில் கொடுத்து அரிவதற்குள்ளேயே இவளுடைய மென்மையான சிறு விரல்கள் இரத்தம்போல் சிவந்து விட்டனவே! இவளுடைய அழகிய முகத்தில் வியர்வைத் துளிகள் முத்துக்களைப்போல் பிரகாசிக்கின்றனவே! கண்கள் கொவ்வைக் கனியைப்போல் சிவந்து விட்டனவே! அடுப்பிலிருந் துண்டாகும் புகையினால் இவளுடைய கண்களில் நீர்தாரை தாரையாகப் பெருகுகின்றதே! முகம் புகையடைந்து போய்விட்டதே! எவ்வளவு மென்மையான சரீரம்! பஞ்சினும் மென்மையான எனது கண்மணியை இந்த விதமாக நான் பார்க்க வேண்டுமென்பது திருவுளச் சம்மதம் போலும்! (பெருமூச்சு விட்டுக்கொண்டே அவ்விடத்தை விட்டு அகலுகிறான்).

கண்ணகி:—(சமையல் தொழில் முடிந்த பின்பு ஒரு இடத்தை ஜலம் தெளித்து சுத்தம் செய்துவிட்டு இளமையான வாழைக் குருத்தை நன்றாய் அலம்பி அவ்விடத்தில் போட்டுவிட்டுக் கோவலனிருக்குமிடம் சென்று) நாதா! இலைபோட்டிருக்கிறது! அமுது செய்ய எழுந்திருங்கள்!

கோவலன்:—கண்மணி! அப்படியே வருகிறேன்! (எழுந்துபோய் போஜனம் செய்கிறான். அவன் போஜனம் செய்த பிறகு கண்ணகியும் உணவருந்துகிறாள்).

கண்ணகி:—(சாப்பிட்டு முடிந்ததும் வெற்றிலைகளில் சுண்ணாந்தடவி நரம்புகிழித்து அவைகளை ஒரு தட்டில்வைத்து பிளவுப்பாக்கை மெல்லியதாகச் சீவி உடன் வைத்துக்கொண்டு கோவலனிருக்கும் அறைக்குள்சென்று) கண்ணாளா! இந்தாருங்கள்! வெற்றிலை; (என்று சொல்லி முதலில் பாக்கைத் தன்கையால் அவனுடைய வாயில்போட்டு பிறகு வெற்றிலையை ஒவ்வொன்றாய் எடுத்துச் சுருள்செய்து கொடுக்கின்றாள்.)

கோவலன்:—(கண்ணகியைத் தன் மார்போடணைத்துக்கொண்டு) கண்மணி! மென்மையான உன்னுடைய சிறியபாதம் வன்மையான பெரிய காடுகளையும் மலைச்சாரல்களையும் கடந்து சென்றது என்பதை உன்னுடைய பெற்றோரும், என்னுடைய பெற்றோரும் கேட்டால் அவர்கள் எவ்விதமான துன்பப்படுவார்களோ? கனவாயில்லாமல் உண்மையாயிருந்தால் இவ்வளவு கஷ்டத்தை அனுபவிப்பதற்குக் காரணம் முன்புசெய்த வினைப்பயனோ? ஒன்றுந்தெரியாமல் என்மனம் கலங்குகிறது! வீணரோடும், வம்பப்பரத்தராகிய காமுகரோடும் கூடி வீண்பொழுதுபோக்கி சான்றோரால் விரும்பப்படும் அழியாத சிறந்தபொருளாகிய நல்ல ஒழுக்கத்தைக் கைவிட்ட எனக்கு இனி நற்கதியும் உண்டாகுமோ? தாய் தந்தையரை அருகிருந்து உபசரித்து அவர்களுக்குச் செய்ய வேண்டிய ஏவலையும் பணிவிடையையும் செய்யாமல தவறிவிட்டேன்! பெருமைபொருந்திய உனக்கும் சிறுமைசெய்தேன்! அப்படியிருந்தும் என்னையே நீ பெரிதாகமதித்து உன்னுடைய தாய் தந்தை முதலிய சுற்றத்தோரையும், குற்றேவல் செய்யக்கூடிய வேலைக்காரர்களையும், செவிலித்தாய் முதலிய அடியோர்களையும், உன்னைச்சேவித்து உனக்கு அந்தரங்க சிநேகிதர்களாயிருக்கும் தோழிமார்களையும் விடுத்து, அந்நான்குக்கும் பதிலாக நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும்

* கோளிப்பாகல் என்றது பலாப் பழத்தினையாகும். பூவாது காய்க்கும் மரத்துக்குக் கோளி என்று பெயர். பலாமரம் பூவாது காய்க்குமாதலால் கோளிப்பாகல் எனப்பட்டது. பெரிதாய்த் திரண்டுருண்டு பழுத்த பலாக்காய் என்பது புலப்பட "கொழுங்கனித் திரள்காய்" என்றார்.

† வாள்வரிக் கொடுங்காய் என்றது வெள்ளரிக்காயை, வெள்ளையான கோடுகளை மேலே உடையதாயும், வளைந்ததாயும் இருப்பதால் அப்பெயர்த்தாயிற்று. இப்பதமே வெள்ளரிக்காயென இப்போது மருவியிருக்கிறது.

நான்கு குணங்களையே உனக்குப் பெருந்துணையாகக்கொண்டு என்னுடைய நிழல் நான் எங்கேபோன போதிலும் என்னைப் பின்பற்றி வருவதுபோல நீ என்னைப் பின்பற்றிவந்தாயே? என்னகாரணம்? உன்னுடைய சிறந்த குணத்தையும், கற்பின் மாட்சியையும், பதி விசுவாசத்தையும் நான் எவ்வாறு புகழ்வேன்?

கண்ணகி:—நாதா! நான் ஒன்றும் புகழ்ச்சிக்குரிய காரியம் செய்யவில்லையே! என்னுடைய கடமை எதுவோ அதைச்செய்தேன்! இதில் புதுமையாவது, புகழ்ச்சிக்குரிய செய்கையாவது, இருப்பதாக என் நீங்கள் நினைக்கவேண்டும்? உண்மைக் காதலனிடம் உண்மைக்காதலிகள் எவ்விதம் நடந்து கொள்ளுவார்களோ, எவ்விதம் நடக்கக் கட்டுப்பட்டிருக்கிறார்களோ, அவ்விதம் நானும்நடந்தேன்! அப்படி நடப்பது சகஜந்தானே, நியாயந்தானே? அதைத் தாங்கள் சிலாகித்துப்பேசுவதுஎனக்கு உசிதமாகப்படவில்லை! புஷ்பம் செல்லுமிடமெல்லாம் மணமும் செல்லுவது புதுமையாகுமோ? சூரியனுடைய கதிர்கள் செல்லுமிடமெல்லாம் வெளிச்சமும் உடன்செல்லுவது ஒரு விசித்திரமாகுமோ?

கோவலன்:—ஆருயிர்க்காதலியே! மெச்சினேன் உனது பொறுமையையும் தன்னடக்கத்தையும்! (மிகுந்த வருத்தக்குறிப்புடன் கண்ணகியை நெருங்க அணைத்து)

"பொன்னே கொடியே புனைபூங் கோதாய்
நாணின்பாவாய் நீணில விளக்கே!
கற்பின் கொழுந்தே பொற்பின் செல்வி!
சீறடிச்சிலம்பி னொன்றுகொண்டி யான்போய்
மாறிவருவன் மயங்காதொழிக!"

கண்மணி! உன்னுடைய காற்சிலம்பில் ஒன்றை நான் கொண்டுபோய் விற்றுவருகிறேன்! அதற்காக நீ வருந்தவேண்டாம்! வேறு ஒன்றையுங்குறித்துக் கவலைப்படவேண்டாம்! [என்று சொல்லும்போதே தன்னையறியாமல் தன் கண்களில் தாரைதாரையாப் பெருகும் கண்ணீரை எங்கே கண்ணகி பார்த்துவிடப் போகின்றாளோ என்னும் அச்சத்தால் அவளுக்குத் தெரியாமல் துடைத்துக்கொள்ளுகிறான்.]

கண்ணகி:—நாதா! இந்தச் சிலம்புக்காகவா நான் வருத்தப்படப்போகிறேன்! அடியாள் தங்களுக்கு முற்றும் பாத்தியப்பட்டவளாயிருக்கும்போது அச்சிலம்பும் தங்களுக்குப் பாத்தியப்பட்டதுதானே தங்களுடைய சமயத்துக்கு உதவாமல் அச்சிலம்பு இருப்பதினால் என்னபிரயோசனம்? தங்களுக்கு உதவும் அந்தச்சிலம்பு எவ்வளவோ புண்ணியஞ் செய்திருக்கவேண்டும்! இந்தாருங்கள்! எடுத்துக்கொண்டு போய் விற்பனை செய்துகொண்டு சீக்கிரம் திரும்புங்கள்! (சிலம்பைக் கழற்றிக் கொடுக்கிறாள்.)

கோவலன்:—கண்மணி! சந்தோஷம்! நான்போய் வருகிறேன்! (கண்ணகியை அணைத்து முத்தமிட்டுவிட்டு வெளியே செல்லுகிறான்.)

[1-ம் அங்கம் 2-ம் காட்சி முற்றும்]

நாகை ஸி. கோபாலகிருஷ்ணன்.

# AIDS TO NATURE STUDY.

## *Elementary Botany and Study of Plant Life.

Nature Study and Child Study—these two in their fullness and perfection complete the Education of Man, drawing out the Soul of man to the fullest extent possible and preparing him to work in tune with the Infinite."—*Guru Vâk.*

" Nature Study by inductive method ought to occupy a prominent place in our Elementry Schools, as it will greatly strengthen the spirit of enquiry and improve the powers of observation in children."—*Extract from the author's preface to the Elementary Botany.*

" The Bean plant was selected as the type of flowering plants . . . Prominence is given to the functional aspect; this stondpoint of view is the most important one. "Form and structure have no significience apart from their functions."—*Extract from the author's preface to the Life of the Bean Plant.*" in Tamil.

## பிரகிருதி வித்யைக்குவேண்டிய சாதக சாதனங்கள்.

"வித்யை யிரண்டுண்டு வேற்றுமை பற்பல
வித்யை யிரண்டும் காரண காரியம்
வித்யையிற் காரணம் சிவசக்தி யாமவ்
வித்யையின் காரியம் ஜடசக்தி யாமே."—குருவாக்கு.

I.



ண்ட பிண்டாகாரமாய் அகிலாண்ட கோடியாய் விளங்கும் ஜகத்தெல்லாம் இயங்குவது சிவசக்தி யாலே. சிவம் என்பது நித்திய மங்களமாய் நிர்மலாகாரமாய் இருப்பதொன்றெதுவோ அதற்குச் சொல்கிறது. அதற்கு "சத்" என்றும் "சன்மாத்திரம்' என்றும் "சத்தாசாமான்யம்" என்றும் சொல்வதுண்டு.

இப்படி நித்திய வஸ்துவா யிருக்குமொன்றை விளங்கச்செய்வ தொன்றெதுவோ, அது சத்ரூபமாயுள்ள அதன்சக்தி அதாவது, சிவசக்தி என்றும் சின்மாத்திரம் என்றும் மஹத்துக்களால் குறிக்கப்படும்.

இந்த சிவமும் சக்தியும் ஒளியும் கிரணமும் போல் இணைபிரியாத் தன்மை வாய்ந்துள்ளது. இவ்விரண்டின் முயக்கத்தாலே துவந்துவாகாரமான மிதுனசக்தி யொன்றுண்டாயிற்று. மிதுனம் என்றாலும் Polarity என்றாலும் ஒன்றே.

இந்த மிதுனசக்தி தானே ஜடஜீவ பதார்த்தங்களாகப் பிரிந்து பரிணாமயோக வித்தியா விருத்தியாலே ஆண் பெண் என்கிற பால் வேற்றுமைக் கிடமாய் நின்றது. †

ஆண் என்பது புருஷ ஸ்வரூபத்துக்குப் பேர்.

* (1) Elementary Botany in Tamil by K. Rangachari, M.A., L.T., with 233 illustrations, Messrs. P. R. Rama Iyer & Co., Madras, 1.8-0. (2) Life or the Bean Plant in Tamil by the same author with 26 illustrations & coloured frotispiece. Messrs P. R. Rama Iyer & Co., Esplanade, Madras, Price As. 6.

† See "Evolution of Sex" by Gedles and Thompson.

பெண் என்பது பிரகிருதி ஸ்வரூபத்திற்குப் பேர்.

ஆனால் இவ்விரண்டும் வாஸ்தவத்தில் கேவலம் வெவ்வேறான வஸ்துக்களல்ல.

ஆணில் பெண் சத்தும், பெண்ணில் ஆண் சத்தும் சேர்ந்திருந்தும், மிகுதிபற்றி ஆண் என்றும், பெண் என்றும் பேர்வந்தது போல், சக்தி மயமான பிரகிருதி யொன்றே புருஷ சப்தமாகவும் பிரகிருதி சப்தமாகவும் பிரிந்து மிகுதிபற்றி புருஷன் என்றும் பிரகிருதி யென்றும் பேர் பெற்றது.

இந்தப் புருஷனையே ஜீவசக்தி யென்றும் மேலே சொன்ன பிரகிருதியையே ஜடசக்தி யென்றும் சொல்லி வழங்குவர் மேலோர்.

II.

சக்தி யென்றால் முக்கியமாய் "அறியும் சக்திக்கே" பேர். அறிவுஒன்றே எங்கும் நிறைந்து "எல்லாமாய், அல்லவுமாய்" வியாபித்து நிற்பது.

இந்த ஏகமாயுள்ள அறிவு சில வஸ்துக்களில் மிகுந்தும், வேறு சில வஸ்துக்களில் குறைந்தும் விளங்கும். இப்படிப்பட்ட மிகுதி குறைவு பற்றி சேதனம், அசேதனம் என்கிற பிரிவுண்டாயிற்று. சேதனம்=அறிவுள்ளது. அசேதனம்=அறிவில்லாதது. இந்த வேற்றுமையெல்லாம் மிகுதி குறைவுபற்றி யுண்டானதன்றி வேறு அல்ல. வாஸ்தவத்தில் (அதாவது வஸ்து மாத்திரத்தில்) பார்த்தால் எல்லாம் அறிவுமயமே. இந்த அறிவுதானே ஆத்மா வென்கிற சப்தத்திற்கு லக்ஷியார்த்தமாம்.

இந்த அறிவு பூரணமாய் விளங்கப் பெற்றவன் ஆத்மன். அப்படிப்பட்ட பரிபூரணமான அறிவு மனுஷ ஜன்மம் எடுத்தவனுக்கே உரியதா யிருப்பதால், மனுஷன் ஆத்ம சப்தத்துக்கு லக்ஷியமாய் விளங்குகிறான்.

மிஸ்டர் செஸ்டர்டன் என்பவர் லண்டன் "டெய்லி நியூஸ்" பத்திரிகையில் "The magnet of morality" என்று தலைப் பெயரிட்டு ஒரு விதானம் எழுதி யிருக்கிறார். அதில் அவர் முக்கியமான மனுஷ ஸ்வபாவம் ஒன்றை நன்றாக வெடுத்து விளக்கிக்காட்டி யிருக்கிறார். மனுஷன் ஸ்வபாவத்தில் "அசாத்தியம்" என்கிற வார்த்தையைக் கேட்டதும் அவனுடைய ஆத்ம சக்தியின் மகிமையால், "அசாத்தியம்" என்று சொல்லப்பட்ட தெதுவோ, அதைச் சாதனந்தேடிச் சாதிக்க முயலுகிறான். இப்படி சாதன சாதக உபாயமறிந்து ஒன்றைச் சாதிக்க முயலுவானாகில், அவன் அதைச் சாதித்தே முடிக்கிறான். ஆதலால் மனுஷன் இயல்பாகவே "அசாத்தியசாத்தியன்" ஆக விளங்குகிறான். அதாவது அவனால் முடியாதது ஒன்றுமில்லை யென்று ரூபிக்கும் ஸ்வபாவ முள்ளவனாக விருக்கிறான்—என்று அவர் உண்மையை உள்ளபடி நன்றாயெடுத்தோதி விளக்கி யிருக்கிறார்.

இந்த அசாத்திய சூரத்துவம் ஆத்மனுக்குரியதேயன்றி ஆனாத்மனுக் குரியதல்ல. இதையே "நினைத்தது முடிக்கும் ஆற்றல்" என்று சொல்வர். இந்த ஆற்றல் உள்ளவனானதால் தான் "ஆண்பிள்ளை சிங்கம்" என்கிற விருது அவனுக்குக் கிடைத்தது. பெண்பிள்ளை பேதையானதால், பருத்த உருவமும், மிகுந்த பலமும் இருந்தும் அதற்குத் தக்க தீரமின்மையால் சிங்கத்தைக்கண்டு நடுங்கும் யானைக்கு ஒப்பானாள்.

ஆண்=சிங்கம்; பெண்=யானை.

சிங்கம் சக்திக்கு வாஹனமும் ஆஸனமுமாயிற்று.

யானை சிவத்துக்குப் போர்வையும் சக்திக்கு மாங்கல்ய முத்திரையு மாயிற்று.

சிவசக்தியைக்கியகாலத்தில் ஆணுக்குரிய தீரம் பெண்ணுக்கு உபாதியாகவும், பெண்ணுக்குரிய பேதமையென்னும் அறிவை மூடும் ஆவரணம், (யானை), நிருபாதிகனான ஆணுக்

குப் போர்வையாகவும், அதன் ஸ்வயம்பிரகாசத் தன்மையை யறியாமல் மயங்கின யானைத் தலை (அறியாமை) வீழ்ந்துபோய் சக்தியின் கழுத்தில் மாங்கல்ய முத்திரையாகவும் அமைந்தது. இப்படியாக சிவமும் சக்தியும் ஒன்றுபட்டுச் சேர்ந்த காலத்தில் ஒன்றிலொன்று லயித்து லிங்காகாரமாய்ச் சிவசக்தியைக்கிய ஸ்வரூபத்தை விளக்கும் அத்வைத வஸ்துவாயிற்று. இதுவே வேதங்கள், ஆகமங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலான எல்லா சாஸ்திரங்களும் போதிக்கும் உண்மை.

அப்படியே தாவரநூலும், (Botany), ஜீவிதநூலும் (Biology) போதிக்கும் உண்மையும் அத்வைத வஸ்து ஒன்றே யுள்ளதென்றும் அதன் பரிணாமமாய் உதித்ததே நாமரூபப் பிரபஞ்சமான மற்றவெல்லாமுமென்றும் துணிந்தாராய்வாருக்குத்தானே விளங்கும்.

பிரகிருதி வித்யைக்குப் பரம சாதகமாயுள்ளது வல்லியின் வாழ்வு. வல்லி யென்றால் கொடி. வல்லியில் வாழ்வு பெற்றது அவரை. "அவரையில் ஒரு கொடியும் வடமனில் ஒரு குடியுமிருந்தாற் போதும்" என்பது பழமொழி.

ஒரு அவரைக்கொடி யிருந்தால் அது தோட்டமெங்கும் படர்ந்து வளர்ந்து பூத்துக் காய்த்துப் பலனைத்தரும். அப்படியே வடமனிலும் ஒரு குடித்தனம் இருந்தால், அதுவொன்றே பல்கிப் பெருகிப் பல குடித்தனங்களாக விருத்தியாகி நாடுநிறைந்த குடியாகும்.

III

ஆகையால் பிரகிருதி வித்யைக்குச் சாதனமாக அவரைக்கொடியின் வாழ்க்கையைப் பற்றி யெழுதினது மிகவும் சரியே. பிரகிருதி வித்யையின் உண்மையை உள்ளபடி அறிய மூன்று அங்கங்களுண்டு. அவை:—(1) பீஜம் அல்லது வித்து, (2) சக்தி யல்லது முளைக்குந் தன்மை, (3) கீலகம் அல்லது முளை.

இதில் 'வித்து' ஆதாரம்; சக்தி ஆதேயம். 'முளை' ஆதாரஆதேயம். இந்த மூன்றும் சேர்ந்த தொன்றதுவோ அதுவே ஸோமஸ்கந்த மூர்த்தி—எல்லா மூர்த்தங்களுக்கும் ஆதாரமாயுள்ள ஏகவடிவம்.

வித்திலிருந்து எப்படி மரம் உண்டாகிறதோ, அப்படி சிவத்திலிருந்து ஜகம் உண்டாகிறது.

"பண்டு முளைப்பது அரிசியே யானாலும் விண்டுமிபோனால் முளையாதாம்." அஃதே போல் சிவத்திலிருந்தே ஜகமுண்டாவதானாலும், அதை மூடியிருக்கும் ஆவரண சக்தி விழுந்துபோனால் ஜகம் தோன்றாதொடுங்கும்.

வித்தும் சக்தியும் சேர்ந்தே முளையுண்டாவது போல், சிவமும் சக்தியும் சேர்ந்தே குமாரக்கடவுள் (ஸ்கந்தர்) ஜகத்துக்கெல்லாம் முளையாக, அதாவது மூலபுருஷனாக விருக்கிறார். ஜகம் தோற்றமும் ஒடுக்கமுமுள்ளதா யிருப்பதுபோல, குமாரக்கடவுளான ஸ்கந்தரும் தேவசேனாதிபதி யாகவும் ஆண்டியாகவுமிருந்து பிரவிருத்தி நிவிருத்தி மார்க்கங்களிரண்டுக்கும் தானே ஆதாரம் என்று காட்டுகிறார்.

இந்த குமாரக்கடவுளை யறிந்தவன் பிரகிருதி வித்யையிற் றேர்ந்தவனாவன்.

ஆதியில் ஏகமாயிருந்த முளைத்தண்டு விருத்தி காலத்தில் இரண்டாகப் பிரிந்து இலை விடுவதுபோல், குமாரக்கடவுளுக்குப் பிரவிருத்தி மார்க்கத்தில் சக்திகள் இரண்டு. பின்ன சக்தியாயிருப்பது (இலையாகிப் பிரிந்து பழுத்து விழுந்து போவது) தேவயானை (இந்திரியங்களுக்கெல்லாம் அதிதேவதையான இந்திரன் குமாத்தி—அதாவது மனம்). அபின்ன சக்தியாகவிருப்பது (இணைபிரியாதிருந்து குருத்துமேல் குருத்தாகக்கிளம்பி வளர்ந்து பூத்துக் காய்த்துப் பழுத்துப் பின்னும் வித்தில் தானே முளையாக வொடுங்கி வேறுபடுத்தப் பெறாமல் இருப்பது வள்ளியம்மன் என்னும் குறவர்

குலம்விளங்கவந்த கௌமாரி—(அதாவது, கள்ள மனத்தினுள்ளே யிருந்து இருளடைந்த அம் மனம் பிரகாசிக்கும்படிச் செய்வதால் உள்ளம் என்று பேர்பெற்ற அந்தக்கரணம்.) முன்னது பஹிர்முகப் பார்வையுள்ள புறக்கரணமாம் மனம். பின்னது அகமுகப்பார்வையுள்ள அழகுபொருந்திய அந்தக்கரணம்.

இவ்விரண்டும் செடி கொடிவர்க்கங்களின் பூவில் புறவிதழ், உள்ளிதழ் இவைகளுக்கு உவமேயமாகும்.

"செடி வாழ்க்கையோ குடி வாழ்க்கையோ" வென்கிறபடி செடியும் குடியும் ஒன்றேயாகி ஒரேதத்துவத்தை விளக்கும். செடியின்றி எப்படிவித்துப் பலனைத்தராதோ, அப்படிப்போல, குடியின்றி அறப்பயிர் (தர்ம்ம வியவசாயம்) ஓங்காது. இந்த அறப்பயிருக்கு ஸத்யம் புறவிதழ் அல்லது பின்னசக்தி; தர்மம் அகவிதழ் அல்லது அபின்னசக்தி. ஆகையால்தான் "ஸத்யத்தைச் சொல்; தர்மத்தைச்செய்" என்று சுருதி முறையிடுகிறது. ஸத்திய மில்லாமல் தர்மம் தழைக்காது. தர்மமில்லாமல் முக்தி பழுக்காது. ஜன்மம் எடுத்ததற்குப் பலன் "வீடு பெறல்"—முக்தி யடைதல்; ஆதலால், ஸத்தியமும் தர்மமும் பரிபாலிக்கப்படா விட்டால் ஜன்மம் பாழ்த்துப்போம்—பிறந்ததற்குப் பயனில்லாமற்போம்.

IV.

இந்தத் தத்துவங்களை யெல்லாம் (தத்துவம் என்றால் உண்மை) குழந்தைமனம் முதலில் உபாதி ஸஹிதமாயுணர்ந்து, பிறகு விவேக முதிர்ச்சியுற்ற காலத்தில் உபாதியை யொழித்து, உபாதிரஹிதமாய் உள்ளத்துணர்ந்து, அறப்பயிர்செய்து, இல்லறம் துறவற மிரண்டில் எதையோ ஒன்றுபற்றி, தர்மந்தழைக்கவுழைத்து அந்த தர்மத்திலும் சிக்கிக் கொள்ளாமல், "நடுவுறத்தர்மம்செய்து" பக்தியெய்திய காலத்தில் பக்திவழியே சென்று முக்திவழியைக் கண்டு முதல்வனை நாடி யுழைக்கும். உருவத்திற் பெரியவர்களானாலும் அறிவிற்சிறந்த பெரியோர் தம் குழந்தைமனம்* (மாசுமறுபடாத மனம்) மாறாது காப்பாற்றி வருவார்கள்.

குழந்தைமனம் மாறுதாயின் குழப்பம் என்றும் உண்டாகாது. ஒழுக்கம் என்றும் இழுக்காது.

பள்ளியிற் படிக்கும் போதனை யெல்லாம் இந்த ஜகமே பள்ளிக்கூடமாக வுள்ளதோர் பெரும்பள்ளியிற் படிக்கயோக்கியதை பெறும்பொருட்டாதலால், 'சோற்றுப்படிப்பை' யொழித்து ஆத்ம விலாஸம் விளங்குவதற்கான உண்மைப் படிப்பைப்பெற எல்லாரும் உழைக்கவேண்டும். இதற்கு மனப்பழக்கம் மிகவும் முக்கிய சாதகமாம். "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றார் ஔவையார்.

மனப்பழக்கமின்றி நல்லொழுக்க மில்லையால், அப்பழக்க மில்லாக்கல்வி மிக இழுக்கேயாம். இவ்விழுக்கினாலேயே இப்பொழுதுள்ள வில்லங்கங்களெல்லாம் விளையலாயிற்று. இதைத் திருத்த வேண்டின் "பழக்க வொழுக்கம்" கட்டாயம் வேண்டும். இப்பொழுதுள்ள காசொழுக்கமாம் (Commercial morality) களவொழுக்கம் உளவுதெரிந்தார்க்கு அளவுகடந்த வருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. இந்தக் களவொழுக்கத்தால் இல்லறம் கெட்டது; துறவறம் கெட்டது; அரசியலாகும் நல்லறமும் கெட்டது. அறன்வலி யிழந்தால் பிறவலியெல்லாமிருந்தும் என்பயன்? சாதகமில்லாச் சாதனம் எதற்குதவும்? ஆகையால் மனப்பழக்கமாகிய சாதகம் இன்றியமையாதிருத்தல் வேண்டும். இதுதான் இக்காலத்தில் இங்கிலீஷ் வித்யாசாலைகளிற் படித்துத் தேறிப் பட்டம் பெற்றவர்களிடம் பூஜ்யமாயிருக்கிறது! இப்படி யுண்மையை யொளிக்காது சொல்ல நேர்ந்ததற்காக உலகத்தாரெல்லாரும் இவ்வேழையை மன்னித்து விடல்வேண்டும். (இன்னும் வரும்.)

* Compare: "Great men do not lose their child hearts."